# புதிய லேவெண்டர் அற்புதம்

ஒய்யாரம்.
நீங்காத
நறுமணம்.

## லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க்




லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் நவீன யுகத்தின் நறுமணம். அதைத் தூவிக் கொண்டால், நறுமணப் பொய்கையில் நீராடுவது போன்றிருக்கும்! அத்தனை மனம் கவரும் மணம் கமழும்! அதிமென்மையானது; அதி மேன்மையானது; புதுமலர்ச்சி பூப்பது. ஒவ்வொரு நாளும் லக்மே லேவெண்டர் ப்யூடி டால்க் தூவி, இன்பத்தில் திளைப்பீர். அந்த அற்புதமான அனுபவம் பெறுவீர்...இன்றும்... என்றும்!



லக்மே டால்க் ஐந்து வகை நறுமணங்களில் உங்களை அடைகிறது: லேவெண்டர், வெட்டிவேர், நிர்வாண், சந்தனம் மற்றும் ஃப்ளோரல் மிஸ்ட்.

ASP/L-82



# கல்கி

பொருளடக்கம்

விரோதிகிருது, வைகாசி 2 -- மே 16, 1971



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |


---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்



மலர் 30



இதழ் 42

# நிலச் 'சீர்திருத்த' மோசடி

நிலச் சீர்திருத்தம் என்கிற பெயரில் 'சோஷலிஸ' சர்க்கார் செய்து வரும் மோசடியை நன்கு அம்பலப்படுத்தும் ஓர் அறிக்கை வெளிவந்துள்ளது. இது ஏதோ ஓர் எதிர்க் கட்சியின் அறிக்கை யல்ல; அரசாங்கத்திலேயே உயர் பதவி வகிக்கும் ஓர் அதிகாரி, அரசாங்கத்துக்குச் சமர்ப்பித்துள்ள அறிக்கை என்பது குறிப்பிடத் தக்கது. குத்தகை சாகுபடிதார் பதிவு இலாகா டைரக்டர் ஸ்ரீ பத்ரிநாத் அவர்களின் அறிக்கை, தற்போது நிலவும் உச்ச வரம்புக் கொள்கை சற்றும் பயனற்றது என்று வெட்ட வெளிச்சமாக்குகிறது.

சில பெரிய நில உடைமைகளின் அளவைக் குறைத்துவிட்டால் சமூக நீதி ஏற்பட்டு உணவு உற்பத்தி அமோகமாகப் பெருகும் என்று கூறுவது வெறும் கட்டுக் கதை என்று தெளிவு படுத்துகிறது ஸ்ரீ பத்ரிநாத்தின் அறிக்கை. தஞ்சை, திருச்சி, மதுரை ஆகிய மூன்று மாவட்டங்களின் நிலைமையைக் கூர்ந்து ஆராய்ந்து பார்த்து, இவ்வறிக்கையை அவர் தமிழ் நாட்டு அரசாங்கத்துக்கு அனுப்பியுள்ளார். தற்போது பெருத்த பண்ணைகள் ஏராளமாக இருப்பது போலவும், இவற்றுக்கு உச்ச வரம்பு விதித்து உபரியை ஆர்ஜிதம் செய்தால் ஏராளமான உழவர்களுக்கு நிலம் வழங்கி விடலாம் என்பதுபோலவும் சோஷலிஸ வாதிகள் பேசுவது வெறும் மாயப் பேச்சு என்று இதிலிருந்து தெரிகிறது. தற்போது விளை நிலங்களில் பெரும் பகுதி குத்தகைக்கு விடப்பட்டிருப்பது போலவும், இவர்களுக்கு நிலச் சொந்தக்காரர்கள் பெரிய அநீதி இழைப்பது போலவும் பரப்பப்படும் கருத்து அடியோடு தவறு என்றும் அறிக்கையிலிருந்து தெரிகிறது. குத்தகைக்கு விடும் வழக்கம் மிக அதிகமாக உள்ள தஞ்சை மாவட்டத்திலேயே எண்பது சதவிகித விளை நிலங்கள் சொந்தக்காரர்களின் நேர் மேற்பார்வையில் தான் பயிரிடப்படுகின்றன. மொத்தத்தில் மற்ற மாவட்டங்களையும் கணக்குப் பண்ணினால், எண்பத்தாறு சதவிகித நிலம் சொந்தக்காரர்களாலேயே பயிரிடப்படுகிறது.

நில உடைமைக்கு வரம்பு விதித்தால் உபரியாகக் கிடைப்பது மிகவும் அற்பமாகவே இருக்கும். சோஷலிஸ வாதிகள் முழக்குவது போல் இதனை நிலமற்ற ஏராளமான உழவருக்குப் பகிர்ந்து தருவது முற்றிலும் ஏமாற்றப் பேச்சு, முடியாத காரியம். சுமார் நாற்பத்தைந்து சத விகிதப் பயிரிடும் நிலச் சொந்தக்காரர்களின் உடைமை ஓர் ஏக்கர், அல்லது அதற்கும் குறைவானது. நாற்பது சதவிகிதத்தினர் ஒன்றிலிருந்து ஐந்து ஏக்கர் வரை வைத்துள்ளனர். ஐந்து ஏக்கரிலிருந்து பதினைந்து ஏக்கர் வரை நிலச் சொத்து உடையவர்கள் பன்னிரண்டு சதவிகிதத்தினரே. பதினைந்து ஏக்கருக்கும் அதிகமாக வைத்துள்ளவர்கள் ஒன்றரைச் சதவிகிதம் கூட இல்லை. இந்த ஒன்றரைச் சதவிகிதத்தினரின் உபரியை உழவுத் தொழிலாளருக் கெல்லாம் பகிர்ந்து தந்து உழவர் சமுதாயத்தைச் சமதர்ம சொர்க்கத்தில் அமர்த்துவது பற்றி ஆட்சியாளர்கள் பேசுவது எத்தகைய மோசடி!

நமது உணவு உற்பத்திக்குக் குந்தகமாக இருப்பது பெரிய பண்ணைகள் அல்ல. இதற்கு நேர்மாறாக நமது விவசாய வயல்கள் மிகச் சிறியதாக இருப்பதே போதிய விளைச்சலுக்குத் தடங்கல். நவீன விவசாய சாதனங்களுக்குச் செலவிட்டு உற்பத்தியைப் பெருக்கக்கூடிய வசதி நமது சிறிய சிறிய நில உடைமைகளுக்கு இல்லாததே உணவுத் துறையில் நம்முடைய பெருங்குறை. எனவே ஏற்கனவே இருக்கிற — நவீன சாதனங்களுக்குச் செலவிட்டு உற்பத்தியைப் பெருக்கச் சக்தியுள்ள — ஒருசில பெரிய பண்ணைகளைத் துண்டுகள் ஆக்கிச் சின்னாபின்னம் செய்வதற்கு நேர் எதிர்த் திசையில் அரசாங்கம் செல்ல வேண்டும். அதாவது தற்போதுள்ள சிறிய நில உடைமைகளை ஒன்று சேர்த்துக் கணிசமான பரப்புள்ள பண்ணைகளாவதற்கு வழிகாண வேண்டும். இந்த உண்மையைத் தெள்ளத் தெளிய உணர்த்துகிறது ஸ்ரீ பத்ரிநாத் அறிக்கை. குடும்பங்கள் பெருகப் பெருக எந்த நில வரம்புச் சட்டமும் இல்லாமலே தலை

பஞ்சம்

நோய்

கிழக்கு பாகிஸ்தான்




முறைக்குத் தலைமுறை உடைமைகளின் அளவு குறைந்துகொண்டேதான் வருகிறது. பண்ணைக்காரர் ஒருவர் மரணமடைந்தால் அவரது நிலத்தை அவரது பல மக்களும் பகிர்ந்துகொள்ளும்போது அவர்கள் சிறு சிறு துண்டுகளையே பெறுகின்றனர். இவ்விதம் நில அளவு சிறுப்பதுதான் விவசாய அபிவிருத்திக்கான முதலீடு செய்யச் சாத்தியமில்லாமல் செய்கிறது. எனவே ஸ்ரீ பத்ரிநாத் அறிக்கை உணர்த்துவது போல் சிறு உடைமைகளை ஒன்று சேர்க்கவே முயற்சி எடுக்கப்பட வேண்டும்.

குத்தகைக்காரருக்கு அநுமதிக்கப்பட்டுள்ள அளவு போல் இரண்டு மடங்கு உடைமைகளைத் தாமே பயிரிடும் சொந்தக்காரர்களுக்கு அநுமதிக்க வேண்டும். அவர்கள் செய்துள்ள முதலீட்டுத் தொகைக்கு நியாயமான லாபம் தரவேண்டும். அவர்கள் சர்க்கார் வரிகள் தரவேண்டியிருப்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

ஒருசில மாவட்டங்களைக் குறித்த அறிக்கை மட்டும் அல்ல இது; தமிழகம் முழுவதற்கும் பொருந்தும் உண்மைகளை இது கூறுகிறது. தமிழகம் மட்டுமல்ல; பாரதம் முழுவதிலும் ஜீவாதாரமான விவசாயத் துறையில் பெருத்த உற்பாதம் விளைவிக்கும் ஒரு கருத்தை மாற்றியாக வேண்டிய அவசியத்தை இது காட்டுகிறது.

'பொது நலன்', 'பொது நலன்' என்று சோஷலிஸவாதிகள் ஓயாமல் பேசினாலும், நம்முடைய ஜனநாயக முறையானது அவர்களுடைய கவனத்தை உணவு விளைச்சலிருந்து வோட்டு விளைச்சலுக்கே திருப்பி விட்டது.

# ராஜாஜியின் கருத்துக்கள்

கிழக்குப் பாகிஸ்தான் நிலவரத்தைப் பார்த்து, இங்கே நான் ஆக்க ரீதியில் ஏதும் சொல்வதாகக் காட்டிக் கொள்ளவில்லை. வெறுமே வருந்திக் கூக்குரல் எழுப்புகிறேன்.

உலக வல்லரசுகள் யாவும் 'பிறர் விஷயத்தில் கவலையில்லை; நம் சொந்தக் காரியத்தைப் பார்த்துக் கொண்டு போவோம்' என்ற எண்ணத்தில் பாறுங்கல்லாக இறுகிவிட்டன. ஜெனரல் யாஹ்யா கானுக்கும், அவரது சகாக்களுக்கும் மற்றவர்களுக்கும் என்ன நேர்ந்து விட்டது? சகோதரத்துவத்தை மையமாகக் கொண்ட இஸ்லாம் மதத்தில் அவர்களுக்குப் பற்றுப் போய்விட்டதா? சுதந்திரம், ஜனநாயகம் முதலியவற்றில் அவர்களுக்கு ஈடுபாடு அடியோடு போய்விட்டதா? சாமானியப் பகுத்தறிவுகூட அவர்களுக்குப் போய்விட்டதா? வெற்று ராணுவ வெற்றியால் எதைச் சாதித்துவிடப் போகிறார்கள்? துவேஷத்தாலும், கெட்ட எண்ணத்தாலும், கொடுங்கோன்மையாலும் தீர்வு காண முடியாது என்று அவர்கள் உணரவே மாட்டார்களா? தப்புக்களை மறக்கவும் மன்னிக்கவும் உதவுகிற அன்பு வழியைப் பின்பற்றிக் கிழக்கு வங்கத்துடன் அமைதிகரமான உடன்பாடு காண்பதே உண்மையான வெற்றி என்று உணர மாட்டார்களா?

✿

என் மனத்தில் பெரிதும் வியாபித்துள்ள பிரச்னை இதுதான்: உலக வல்லரசுகள் மா-ஸே-துங்கின் தயவில் தெற்கு ஆசியாவைப் பரிபூரணமாக விட்டு விட்டனவோ என்று நினைக்கத் தோன்றுகிறது. 'ஐரோப்பிய விவகாரங்களைப் பற்றி ராஜதந்திர நடவடிக்கைகள் எடுப்பதே நமக்குப் போதும்' என்று அவை திருப்தியுடன் சங்கற்பம் செய்துவிட்டனவா? கிழக்கு வங்கச் சண்டையை நிறுத்தி, சமாதானப் பேச்சில் இறங்குமாறு பாகிஸ்தானை வலியுறுத்துவதற்கு வல்லரசுகள் சக்தி வாய்ந்த நடவடிக்கை எடுக்கவில்லை. ஆசிய விவகாரங்களில் அவற்றுக்கு உள்ள அசிரத்தைக்கு ஒரு பயங்கர அறிகுறியே இது. இந்த அசிரத்தைக்கு எது காரணமாயினும், எதிர்கால விபரீதத்தின் கரு இதில் இருக்கிறது.

இதற்கு முன் கண்டிராத அளவில் கிழக்குப் பாகிஸ்தானில் ரத்தக் களரி நிகழ்ந்திருக்கையில் உலக வல்லரசுகள் காட்டும் அசிரத்தை நம்மால் புரிந்து கொள்ளவே முடியாத பரிதாபமாகும். மக்களினத்தில் ஒரு பகுதியினர் மற்றவர் கண்களுக்கு வாயில்லா ஜீவனுகவே தோன்றுகின்றனர் போலிருக்கிறது.

வல்லரசுகள் இவ்விதம் இருக்கையில், சீனமோ தன் விஸ்தரிப்பு இலட்சியத்தை இறுகப் பிடித்துக்கொண்டிருக்கிறது. இந்தியாவில் பல பெயர்களைச் சூட்டிக் கொண்டு சீனத்தின் தோழர்கள் நிறைய இருக்கிறார்கள்.

✿

மே தினம் சமீப காலத்திலேயே ஏற்பட்ட விழா. இதே அடிப்படையில் நமக்கு ஒரு புராதன விழா இருக்கிறது. அதுவே ஆயுத பூஜை. தொழிலாளிகளுக்கும், முதலாளிகளுக்கும், சகலவிதமான கருவிகளுக்கும் அது ஒரு புண்ணிய தினம். துடைப்பம், கத்தி, மண்வெட்டி, ஏர், வண்டி இவற்றிலிருந்து சமீப கால ஆலை என்ஜின்களும் ஆகாய விமானங்களும் உள்பட அனைத்துக்குமே எளிமையுடன் வழிபாடு நடத்தும் தினம் ஆயுத பூஜை. இந்த பூஜை மனோபாவத்தில் முதலாளி—தொழிலாளிப் பூசல் எண்ணங்களுக்கு இடமே இல்லை; இது அனைவரும் ஒன்றாக இசைந்து செய்கிற வழிபாடாக இருக்கிறது. பார்க்கப் போனால், முதலாளி, தொழிலாளி என்பவர்கள் யார்? இரு தரப்பினருமே தேச சேவைக்கு உதவும் ஆயுதங்கள், கருவிகள்தாம்.

பூசலையும், பேதத்தையும் காட்டாமல் நன்றியையும் ஒற்றுமையையும் காட்டும் ஆயுத பூஜை உணர்வு மே தின விழாவிலும் ஏற்பட வேண்டும் என்று யார்தான் விரும்ப மாட்டார்கள்?

---

இவ்வாண்டு மே தினத்தன்று மேதினி போற்றும் குருவாயூரில் மகோற்சவமொன்று சிறப்புடன் நடந்தேறியது. சென்ற ஆண்டு நவம்பரில் தீ விபத்துக்கு ஆளான ஸ்ரீ குருவாயூரப்பன் ஆலயப் புனர் நிர்மாணப் பணிக்கு அன்றைய தினம் ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அஸ்திவாரம் இட்டார்கள். லட்சோபலட்சம் மக்கள் விழாவில் கலந்துகொண்டு களிகொண்டனர். ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அஸ்திவாரப் பிரதிஷ்டை செய்வதையும், அவர்களுக்குக் குருவாயூரில் வரவேற்பு நல்கப்படுவதையும், அவர்கள் ஆதிசங்கரரின் அவதார ஸ்தலமான காலடிக்கு விஜயம் செய்வதையும் இங்கு புகைப்படங்களில் காண்கிறோம்.



# என்ன சேதி?

## டம்பாச்சாரித் திட்டம்

தெற்காசியாவிலேயே உயர்ந்த கட்டிடத்தைச் சென்னையில் எழுப்பப் போகிறார்கள் என்றால் உடனே நமக்கு அதில் ஒரு பெருமிதம் ஏற்படலாம். ஆனால் இந்த அர்த்தமற்ற பெருமித உணர்வுக்காகத் தமிழ்நாட்டு அரசாங்கம் பதினாறு கோடி ரூபாயைச் செலவிடுவதென்பது சிறிதும் ஒப்ப முடியாத விஷயம். பல இனங்களில் மத்திய சர்க்காரின் அடி ஒற்றி நடக்கும் தி. மு. க. அரசாங்கம் டம்பாச்சாரித்தனத்தையும் தில்லியிலிருந்து சுவீகரித்திருக்கிறது. அதனால்தான் ராஜ்ய நிதி நிலைமை பற்றித் தினம் தினமும் மூக்கால் அழுதுகொண்டு மதுவிலக்கை எடுக்கலாமா, தில்லியை எப்படியேனும் மிரட்டி போட்டு வசூலிக்கலாமா என்றெல்லாம் தவித்து வரும் அரசு இப்படியொரு பிரம்மாண்டக் கட்டிடத் திட்டத்தை மேற்கொண்டுள்ளது. இந்தச் செலவின் பெரும் பகுதி கட்டிடப் பொருள்களுக்கும், யந்திரங்களுக்கும், தளவாடங்களுக்குமே செல்லும். 'மனித அம்சம்' இதில் குறைவாகவே இருக்கும். மாறாக இதே பதினாறு கோடி ரூபாயை ராஜாஜி குறிப்பிடுவது போன்ற 'திறந்தவெளித் திட்ட'த்தில் செலவிட்டால் பதினாயிரம் மக்களுக்கு மாதம் நூறு ரூபாய் ஊதியத்தில் பத்தாண்டுகளுக்குமேல் வேலை தரலாம். அதோடு இந்த வேலையின் பலனைப் பொதுமக்கள் அனைவரும் பெறுவார்கள். அல்லது இத் தொகையைக் கொண்டு தலா ரூ. 2000 பெறுமானமுள்ள 70,000 சிறு வீடுகள் கட்டி ஏழை மக்களின் உபயோகத்துக்கு விடலாம்.

விண்ணை உரசும் கட்டிடத்தில் ஏதேதோ காரியாலயங்களை வைத்து வாடகை வசூலிக்க எண்ணுகிறார்கள். உண்மையிலோ கட்டிடம் கட்டிவிட்டோமே, சுழலும் சிகரம் நிர்மாணித்து விட்டோமே என்பதற்காக அதில் அநாவசியக் கண்காட்சிகளும், அர்த்தமற்ற விருந்துபசாரங்களும் நடத்தி மேலும் லட்சக்கணக்கில் செலவு செய்வார்கள்.

'மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் மக்கள் அரசு' என்று பறையறையப்படும் சர்க்கார், மக்களுக்கு உதவாத டாம்பீகத் திட்டங்களில் ஈடுபடுவது விந்தை!

## பகவானை அடைந்த பாகவதர்

இருள் சூழ்ந்த இவ்வுலகில் அபூர்வமாகவே காணப்படும் புண்ணியாத்மாக்களில் ஒருவர் இறைவனடி சேர்ந்துவிட்டார். கலியுகத்தின் தலைசிறந்த மோட்ச சாதனமாகிய பகவன் நாம சங்கீர்த்தனத்தில் தலைசிறந்து விளங்கிய புதுக்கோட்டை பிரம்மஸ்ரீ கோபாலகிருஷ்ண பாகவதரவர்கள், தாம் ஆண்டு ஆண்டுகளாகப் பரவசத்துடன் பாடி பஜித்து வந்த பரமனின் திருவடிகளில் லயித்துவிட்டார்.

உயர்ந்த சங்கீதம், உன்னதமான பக்தி, கனிவு நிறைந்த தோற்றம் இவற்றுடன், புராண இதிகாசங்கள் குறிப்பிடும் ஞான-சீல-வயோ விருத்தர்களான பரம பக்தர்களை நினைப்பூட்டி வந்தார் ஸ்ரீ பாகவதர் அவர்கள். எவ்வளவு புண்ணியம் நிறைந்த வாழ்வு அவரது? எத்தனை எத்தனை இடங்களுக்குச் சென்று எத்தனை எத்தனை முறை ராதா கல்யாணம் நடத்தியிருப்பார்? எவ்வளவுபேர்களை பஜனை பத்ததியில் — பக்தி இன்பத்தில் — ஈடுபடுத்தியிருப்பார்? அந்தப் பஜனைகளைக் காண்பதன் மூலம், கேட்பதன் மூலம் எத்தனை ஆயிரம் பேர்களுக்குப் புனிதமான உணர்வுகளை ஊட்டிக் கொடுத்திருப்பார்?



'அப்பா' கோபாலகிருஷ்ண பாகவதர்

வயது முதிர்ந்தவர்கள் உடலத்திலிருந்து பதமாக விடைபெற்று, ஈசனின் இணையடியை அடைவதில் வருத்தப்பட ஏதுமில்லைதான். ஆயினும் அடியார் உலகைக் கருத்தில் வைத்துப் பார்க்கையில், அவர்களுக்கு 'அப்பா'வாக இருந்து பக்தி ஆவேசம் ஊட்டிய ஒரு பெரும் சக்தி மறைந்ததே என்று வருந்தாமல் இருக்க இயலவில்லை.

## ஆதி சங்கரர் லட்சார்ச்சனை

ஸ்ரீ காஞ்சி காமாட்சி அன்னையின் ஆலயத்திலுள்ள ஆதிசங்கர பகவத்பாதர்களின் சந்நிதி விசேஷச் சிறப்புப் பெற்றது. இந்தத் திருக்கோயிலில் ஆதிசங்கரர் தாமே ஸ்ரீ சக்ரம் பொறித்து அதில் தேவியின் மகாசக்தியை உறைவித்தார். தாமும் இத்தலத்திலேயே வாழ்ந்து, இறுதியில் அவளிடமே ஐக்கியமானார். இங்குள்ள ஸ்ரீ சங்கரர் பிம்பம் ஆசாரியாளின் பூரண சாந்நித்தியம் பெற்றது. வழக்கம் போல் இந்தத் திவ்விய மூர்த்திக்கு இவ்வாண்டும் சங்கர ஜயந்தி உத்ஸவம் சிறப்பாக நடைபெற்றது. இதையொட்டி ஜூன் 8ந் தேதி நிகழும் ஸ்ரீ காமகோடி பெரியவாள் ஜயந்தி வரை ஆசாரியாளுக்கு லட்சார்ச்சனை நடத்தப்படுகிறது. சிவஸ்வரூபமான ஆசாரியாளுக்கு ருத்ர திரிசதியால் அர்ச்சனை நடத்தப்பெறுகிறது. ஆஸ்திக அன்பர்கள், ''பொருளாளர், ஸ்ரீ சங்கர பக்தஜன சபா, 116—ஏ, ராஜவீதி, காஞ்சிபுரம்'' என்ற முகவரிக்கு ரூபாய் எட்டும், தங்களது பெயர் — கோத்திரம் — நக்ஷத்திரம் ஆகிய விவரமும் அனுப்பி வைத்துப் பிரசாதம் பெறுவார்களாக!



### ஆறாம் அத்தியாயம்
### "பூம் பூம்"

பெரியண்ணனும் செந்திருவும் மாற்றி மாற்றிச் சொன்னதிலிருந்து, மகுடபதி பின்வரும் விவரங்களைத் தெரிந்து கொண்டான்.

சிங்கமேடு தங்கசாமிக் கவுண்டரின் தமையனார் மருதாசலக் கவுண்டர் என்பவர். மயிலாப்பூரில் பிரசித்தி பெற்ற வக்கீலாயிருந்தார். பிதிரார்ஜித சொத்து ஏராளமாயிருந்ததுடன், வக்கீல் தொழிலிலும் அவருக்கு வருமானம் நிறைய வந்து கொண்டிருந்தது. சென்னையில் உயர்ந்த அந்தஸ்தும் நாகரிகமும் வாய்ந்த மனிதர்களுடன் அவர் பழகிக் கொண்



# மகுடபதி

## அமரர் கல்கி

டிருந்தார். அவருடைய ஏகபுத்திரி செந்திரு. செந்திரு தன்னுடைய ஆறாம் வயதிலேயே தாயாரை இழந்து விட்டாள். தாயை இழந்த குறை அவளுக்குத் தெரியாதபடி தகப்பனார் வளர்த்து வந்தார்.

முதலில் அவள் கான்வெண்ட் ஸ்கூலிலும், பிறகு அடையாறு பள்ளிக்கூடத்திலும் படித்தாள். அவளுடைய முகக் களையினாலும் புத்திசாலித்தனத்தினாலும் பள்ளிக்கூடத்தின் செல்லக் குழந்தையாயிருந்தாள். மயிலாப்பூரில் அவளுடைய தந்தையின் சிநேகிதர் வீடுகளில், அவளை அன்புடன்வரவேற்காத வீடுகிடையாது.

நாலு வருஷங்களுக்கு முன்னால் செந்திருவின் தலையில் பெரிய இடி விழுந்தது. அவளுடைய தகப்பனார் மருதாசலக் கவுண்டர் டைபாய்டு சுரம் வந்து இறந்து போனார். அப்போது அவளுக்கு வயது பதின்மூன்று.

செந்திரு அநாதையான அதே சமயத்தில் பெரும் பணக்காரியாகவும் ஆனாள். அவளுடைய தாயாருடைய சொத்துக்கள் தகப்பனாருடைய சொத்துக்கள் எல்லாவற்றுக்கும் உரியவள் ஆனாள்.

அவளுடைய சித்தப்பா தங்கசாமிக் கவுண்டர், அவளைச் சிங்கமேட்டில் தம் வீட்டுக்கு அழைத்துப்போனார். வேறெங்கும் அவளுக்குப் புகலிடம் கிடையாது.

தங்கசாமிக் கவுண்டருக்கும் அவருடைய தமையனாருக்கும் எவ்வளவோ வித்தியாசங்கள். மருதாசலக் கவுண்டர் முப்பத்தைந்து வயதிலேயே முதல் மனைவியை இழந்து மறுவிவாகம் செய்து கொள்ளவில்லை. தங்கசாமிக் கவுண்ட

ருக்கோ வீட்டில் இரண்டு மனைவிமார் இருந்தார்கள்.

மயிலாப்பூரில் பதின்மூன்று வருஷங்கள் வாழ்ந்த செந்திருவுக்குச் சிங்கமேடு வாழ்க்கை, கொஞ்சமும் பிடிக்கவில்லை. ஊரிலே மற்றப் பெண்களெல்லாம் வயல் காடுகளுக்காவது இஷ்டப்படி சென்று கொண்டிருந்தார்கள். பெரிய கவுண்டர் வீட்டுப் பெண்ணானபடியால் செந்திரு, வீட்டை விட்டு வெளிக் கிளம்ப முடிய வில்லை. அவளுடைய நடை உடை பாவனைகள் வீட்டில் மற்றவர்களுக்குப் பிடிக்கவில்லை. மற்றவர்களுடைய பழக்க வழக்கங்கள் இவளுக்குப் பிடிக்கவில்லை. இவளுடைய படிப்புக் கர்வத்தை அவர்களால் சகிக்க முடியவில்லை. அவர்களுடைய படிப்பில்லாமையை இவளால் பொறுக்க முடியவில்லை. இதனால் வர வர வீட்டில் ரகளை அதிகமாகிக்கொண்டு வந்தது.

தங்கசாமிக் கவுண்டர் மருதாசலக் கவுண்டர் போலவே சமபாகம் பெற்றவர். ஆனால் அவர் தாலுகா போர்டு, ஜில்லாபோர்டு எலெக்ஷன்களில் ஈடுபட ஆரம்பித்ததிலிருந்து, வரவுக்கு மேல் செலவாகிக் கடன் முற்றிக் கொண்டு வந்தது. இப்போது அவருக்கு இரண்டு லட்ச ரூபாய் கடன்; சொத்து முழுவதையும் விற்றாலும் அடைக்க முடியுமா என்பது சந்தேகம்.

எலெக்ஷன் விவகாரங்களில் தங்கசாமிக் கவுண்டரின் கூட்டாளி, பெயர் பெற்ற கள்ளுக் கடை கண்டிராக்டரான கள்ளிப்பட்டிக் கார்க்கோடக் கவுண்டர். தங்கசாமிக் கவுண்டர் அதிகமாகக் கடன்பட்டிருந்ததும் மேற்படி கார்க்கோடக் கவுண்டரிடம்தான்.

தங்கசாமிக் கவுண்டர் கடனடைத்து மீந்து வருவதற்குக் கார்க்கோடக் கவுண்டர் ஒரு யோசனை சொன்னார். ஏற்கனவே கார்க்கோடக் கவுண்டருக்கு மூன்று தாரக் கல்யாணம். முதல் தாரம் இறந்தது போக இன்னும் இரண்டு மனைவிகள் வீட்டில் இருந்தார்கள். இப்போது செந்திருவைக் கல்யாணம் தமக்குச் செய்து கொடுத்து விடுவதாயிருந்தால் கடன் பூராவையும் தாமே எடுத்துக்கொண்டு தீர்த்து விடுவதாகக் கார்க்கோடக் கவுண்டர் சொன்னார். அதற்குத் தங்கசாமிக் கவுண்டர் சம்மதித்து விட்டார். செந்திரு மைனர் வயது நீங்கி மேஜர் ஆவதற்கு இன்னும் ஆறு மாதந்தான் இருந்தபடியாலும், மேஜர் ஆகிவிட்டால் ஏதாவது 'ரவுஸ்' பண்ணுவாள் என்று அவர்களுக்குப் பயமிருந்தபடியாலும், கல்யாணத்தை இந்த மாதமே முடித்து விடுவதென்று தீர்மானித்திருந்தார்கள்.

கார்க்கோடக் கவுண்டர் அடிக்கடி சிங்கமேட்டுக்கு வருவதுண்டாதலால், செந்திரு அவரைப் பார்த்திருக்கிறாள். அவரைக் கண்டாலே அவளுக்குக் கதி கலங்கும் அவர் எதிரிலேயே வரமாட்டாள். கலியாணப் பேச்சு அவளுடைய காதில் விழுந்ததும் அவள் விஷம் குடித்து உயிரை விட்டுவிடத் தீர்மானித்தாள். பெரியண்ணக் கவுண்டனிடம் விஷம் சம்பாதித்துத் தரும்படி கேட்டாள். பெரியண்ணன் அவளைத் தடுத்து, கல்யாணத்தை நிறுத்தவும், செந்திரு அந்த வீட்டிலிருந்து தப்பிக்கவும் வேறு வழி யோசிக்கலாம் என்றான்.

அச்சமயத்தில் செந்திருவுக்கு அவளுடைய பள்ளிக்கூடத் தோழி பங்கஜத்திடமிருந்து ஒரு கடிதம் வந்தது. செந்திரு மயிலாப்பூரில் இருந்தபோது அடுத்த வீட்டில் ஸப் ஜட்ஜ் அய்யாசாமி முதலியாரின் குடும்பத்தார் வசித்தார்கள். முதலியாரின் பெண் பங்கஜம். செந்திரு சிங்கமேட்டுக்கு வந்தபிறகு சில காலம் அவளும் பங்கஜமும் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்கள். அப்புறம் திடீரென்று பங்கஜத்தின் கடிதங்கள் நின்று போயின. தான் எழுதும் கடிதங்கள் ஒருவேளை தபால் பெட்டியில் சேர்க்கப்படுவதில்லையோ என்று செந்திரு சந்தேகித்தாள். அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள அவளுக்கு வழியில்லாமல் இருந்தது. கடைசியாகப் பங்கஜத்திடமிருந்து கடிதம் வந்து இரண்டு வருஷங்களுக்கு மேலாகி விட்டது.

பெரியண்ணனும் செந்திருவும் தப்பும் வழியைப் பற்றி யோசனை செய்து கொண்டிருந்தபோது, பங்கஜத்திடமிருந்து கடிதம் வந்தது. அச்சமயம் தங்கசாமிக் கவுண்டர் ஊரில் இல்லை. ஏதோ கேஸ் சம்பந்தமாய்ச் சென்னைப்பட்டணம் போயிருந்தார். ஆகையால் கடிதம் செந்திருவின் கையில் நேரில் கிடைத்து விட்டது. அதில் பங்கஜம், தான் எழுதிய பல கடிதங்களுக்குச் செந்திருவிடமிருந்து கடிதம் வரவில்லை என்றும், அதனால் கடிதம் எழுதுவதையே



நிறுத்தி விட்டதாகவும், இப்போது அவளுடைய தகப்பனார் உத்தியோகத்திலிருந்து ரிடையர்ட் ஆகிவிட்டபடியால், குடும்பத்துடன் கோயமுத்தூரில் வந்து குடியேறியிருப்பதாகவும், செந்திருவின் ஊருக்கு ஒருநாள் வந்து அவளைப் பார்க்க விரும்புவதாகவும் எழுதியிருந்தான்.

இதைப் பார்த்ததும், செந்திருவும் பெரியண்ணனும் ஒரு முடிவுக்கு வந்தார்கள். கல்யாணத்தை நிறுத்துவதற்குப் பங்கஜத்தின் மூலமாக அவளுடைய தகப்பனாரின் ஒத்தாசையைத் தேடுவது என்று தீர்மானித்தார்கள். பெரியண்ணன், முதலில் தான் மட்டும் கோயமுத்தூர் போய் வருவதாகச் சொன்னான். செந்திரு அதை மறுத்து, ஒரு நிமிஷம்கூடத் தன்னால் அந்த வீட்டில் இருக்க முடியாதென்றும், இரண்டு பேரும் கோயமுத்தூருக்குக் கிளம்பி விடலாம் என்றும் பிடிவாதம் பிடித்தான். கோயமுத்தூரில் தங்கசாமிக் கவுண்டருக்குச் சொந்தமான இந்த வீடு இருப்பது அவர்களுக்குத் தெரியும். அது பூட்டிக் கிடக்கிறது என்றும், தங்கசாமிக் கவுண்டர் எப்போதாவது குடும்பத்துடன் கோயமுத்தூருக்கு வந்தால் அதில் தங்குவது வழக்கமென்றும் அவர்கள் அறிந்திருந்தார்கள். அந்த வீட்டுப் பூட்டின் சாவியும் சிங்கமேட்டில்தான் இருந்தது. அதை எடுத்துக் கொண்டு, அன்றைய தினம் அதிகாலையில் ஒருவருக்கும் தெரியாமல் இரண்டு பேரும் கிளம்பிச் சிங்கமேட்டுக்கு இரண்டு மைல் தூரத்திலிருந்த ஸ்டேஷனில் ரயில் ஏறிக் கோயமுத்தூர் வந்து சேர்ந்தார்கள்.

ஸப் ஜட்ஜ் அய்யாசாமி முத



லியாரின் பங்களா எங்கே இருக்கிற தென்று கண்டுபிடிப்பதற்காக முதலில் பெரியண்ணன் செந்திருவின் கடிதத் துடன் போனான். போகும்போதுவீட்டில் செந்திரு தனியாயிருப்பது யாருக்கும் தெரியாமலிருப்பதற்காக, வெளியில் கத வைப் பூட்டிக் கொண்டு போனான். அவன் திரும்பி வந்து வெளிக் கதவைத் திறந்த போதுதான் மகுடபதியும் அந்த வீட்டுக்குள் நுழைந்தான்.

இவ்வளவு விவகாரங்களையும் அவர்கள் சொல்லி முடிப்பதற்கு வெகு நேரம் ஆகிவிட்டது. எல்லாம் கேட்ட பிறகு மகுடபதி, ''பாட்டா! இவ் வளவு சொன்ன நீ ஒரு விஷயம் மட்டும் சொல்லவில்லையே! சிங்கமேட்டுக் கவுண் டர் வீட்டுக்கு நீ எப்படி வந்து சேர்ந் தாய்?'' என்றான். அதன்மேல் பெரி யண்ணன் அந்தக் கதையையும் சுருக்க மாகச் சொன்னான்:

பல [redacted]

கவுண்டர். இப்போது இந்த இடத்தில் என்னைப் பார்த்தால் என்ன செய் வாரோ தெரியாது. அவரே கத்தி எடுத்து என்னைக் குத்திக் கொன்று விடுவார்'' என்றான் மகுடபதி.

அப்போது பெரியண்ணன் முகத்தில் உண்டான விகாரத்தையும், அவனு டைய கண்களில் தோன்றிய பயங்கரத் தையும் மகுடபதியினால் அறிந்து கொள்ளவே முடியவில்லை.

''என்ன, பாட்டா! இப்படி மிரளு கிறாயே? கத்திக்குத்து எல்லாம் உனக் குப் புதிதல்லவே?'' என்றான்.

''தம்பி, தம்பி! அப்படியெல்லாம் நீ ஒன்றும் பேசாதே. நீ எனக்கு ஒரு சத்தியம் செய்து கொடுக்க வேண்டும். கள்ளிப்பட்டிக் கவுண்டர் இட்ட மாத் திரம் நீ போகவேகூடாது. ஒருபோதும் போகக் கூடாது'' என்றான் பெரியண் ணன். அப்போது அவன் பேச்சே ஒரு [redacted]

உரிமைகளை மட்டும் மனத்தில் வைத்துக் கொண்டு நம்முடைய கடமைகளை மறந்து விட்டால் அந்த உரிமைகளை நாம் என்றும் அடைய மாட்டோம். கடமைகளைச் செய்து தீர்த்தோமானால் உரிமைகள் தாமே வந்து சேரும். கடமைகளைச் செய்யாமல், உரிமைகளை அடைய ஓடினோமானால் உரிமைகள் கொள்ளிவாய்ப் பிசாசைப் போல் நம் கைக்கு எட்டாமல் தூரமாகவே போய்க் கொண்டிருக்கும். நாம் ஓட ஓட அதுவும் கைக்கு எட்டாமல் முன்னால் ஓடும். "உன் கருமத்தை நீ செய்; பயனைப் பற்றிக் கவலை கொள்ளாதே. கருமமே உன் கடமை. பயனை எனக்கு விட்டு விடு" என்று கண்ணன் உபதேசிப்பதற்கும் இதுவே கொள்கை.

(யங் இந்தியா 8-1-25)

எதையும் ரகசியமாக மறைத்து வைப்பது பாவம் என்பது என் கொள்கை. பகவான் எப்போதும் அண்மையிலேயே இருந்து, அனைத்தையும் பார்த்து வருகிறான். இதனால் தான் ஆண்டவனுடைய நாமங்களில் 'சாட்சி' என்பது ஒன்று. எதையும் அவன் நேரில் பார்க்கிறான். அப்படியிருக்க நாம் எதையேனும் ஏன் மறைத்து வைக்க வேண்டும்? ஆண்டவனுடைய சாந்நித்தியத்தை உணர்ந்தோமானால், அனைத்தையும் அவன் நேரில் காண்கிறான் என்பதை உணர்ந்தோமானால் நாம் எப்படிக் கெட்ட எண்ணங்களை எண்ணுவோம்? அழுக்கும் குற்றமும் இருந்தாலே தான் மூடி மறைத்து வைக்க வேண்டியதாகிறது. உள்ளத்திலுள்ள அழுக்கை மறைக்க ஆசைப்படுகிறோம். அதற்குப் பதிலாக அப்படி மறைக்க வேண்டிய எண்ணங்களுக்கு மனத்தில் இடங்கொடுக்காமலிருக்க வேண்டும் என்பது என்னுடைய உபதேசம். எதையும் மறைக்க வேண்டாம். (யங் இந்தியா 22-12-20)

செய்த பாபத்தின் பயன்களினின்று விடுபட வேண்டும் என்று நான் பிரார்த்தனை செய்ய மாட்டேன். பாபத்தினின்று விடுபட வேண்டும் என்றே வேண்டிக் கொள்வேன். பாப எண்ணமே என் மனத்தில் எழ விடாமல் என்னைக் காப்பாற்ற வேண்டும் என்றுதான் வேண்டிக் கொள்வேன். அவ்வாறு குற்ற மற்ற மன நிலையை அடையும் வரையில் சாந்தி இல்லை என்பதை அறிவேன்.

ஆண்டவன், பாவம் செய்தவனையும் நன்னெறியில் நின்று வாழ்க்கை நடத்துபவனையும் சமமாகவே மதிக்கிறான். இருவருக்குமே அவன் பிதா. நன்னெறியில் நிற்பவன் தவறினவனைக் கண்டு இகழ்ந்தால் அந்த அகம்பாவத்தினால் அவனுடைய சன்மார்க்கம் பழுதுபடும்; வேறு பாவம் செய்யாதவனாக இருந்தாலும், பாபம் செய்தவனைக் காட்டிலும் தாழ்ந்து போவான். தருமத்தை உணராமல் ஒருவன் செய்யும் பாபத்தைக் காட்டிலும் தருமத்தை உணர்ந்த ஒருவனுடைய அகம்பாவம் பெரிய பாவமாகும். (ஹரிஜன் 14-10-33)

இறந்து போனவர்களோடு நான் சம்பாஷித்தது கிடையாது. இறந்து போனவர்களின் ஆன்மாக்கள் எனக்குச் செய்தி அனுப்பியதும் கிடையாது. அப்படி இறந்து போனவர்கள் உயிருடன் இருப்பவர்களுக்கு ஏதேனும் செய்தி அனுப்புவதுண்டா, அப்படிச் செய்திகளை அடைந்ததாகச் சொல்லிக் கொள்கிறவர்களுடைய பேச்சு உண்மையா என்று என்னைக் கேட்டால் அவையெல்லாம் பொய் என்று சொல்வதற்கு என்னால் முடியாது. அப்படிச் சொல்வதற்கு எனக்கு உரிமை இல்லை. ஆயினும் ஒன்று சொல்வேன். இறந்தவர்களோடு பேசப் பார்ப்பது முற்றிலும் தவறு என்பது என் அபிப்பிராயம். இத்தகைய சம்பாஷணைகள் நடத்துவதை உண்மையாகவே வைத்துக் கொண்டாலும் இறந்தவர்களுடைய சாந்தியைக் கெடுத்தவர்களாவோம். அவர்களுடைய முக்திக்குத் தடை செய்தவர்களாவோம். உடலை விட்டுப் பிரிந்த உடனே ஆன்மா புனிதமடைந்துவிடவில்லை. உயிருடன் இருந்த போது அடைந்த குற்றங்கள் அந்த ஆன்மாவை இன்னும் பாதித்துக் கொண்டுதான் இருக்கும். ஆனபடியால் இறந்தவர்களிடமிருந்து அடையும் யோசனைகள் எல்லாம் நன்மை என்று வைத்துக் கொள்வதற்கில்லை. தவறான யோசனைகளும் இறந்தவர்கள் சொல்லக்கூடும். ஆனபடியால் இறந்தவர்களோடு சம்பாஷிப்பதை நான் முற்றிலும் கண்டிக்கிறேன். அவர்களுக்கும் அது நன்மை அல்ல; நமக்கும் அது நன்மை அல்ல. என்னுடைய அநுபவத்தில் இத்தகைய சம்பாஷணைகள் நடத்துபவர்கள் எல்லாம் மூளைக் கோளாறுக்காரர்கள். இதனால் நன்மை அடைந்தவர்களை என் அநுபவத்தில் கண்டதில்லை. (யங் இந்தியா 21-9-29)

சரியான முறையில் வாழ்க்கை நடத்த ஆரம்பித்தோமானால் மூட நம்பிக்கைகளும், பிற குற்றங்களும் தாமாகவே விலகிப் போகும். சரியான முறையில் நடந்து கொள்வதே முக்கியம். மனத்தில் உள்ள நம்பிக்கைகள் எவ்வாறாயினும் சரி. அவை தாமாகவே சீர்ப்படும். (யங் இந்தியா 11-8-27)

என்னுடைய பல குற்றம் குறைகளையும் பாபங்களையும் மறைக்காமல் ஒப்புக்கொண்டு வருவதால் அவை எனக்குச் சுமையாக இல்லை, ஆண்டவனை நோக்கிச் செல்லுகிறேன் என்கிற உணர்ச்சி இருக்கிறபடியினால் அந்தச் சுமையின் பாரம் எனக்கு இல்லை. ஆண்டவனுடைய அருளாகிய குளிர்ந்த வெண்ணிலாவில் நடந்து செல்லுகிறேன். என்னுடைய நியமங்களும் உபவாசங்களும் ஜபங்களும் என்னைக் காப்பாற்றும் என்று நான் எண்ணவில்லை. அவனுடைய அருள் ஒன்றே என்னைக் காக்கும். அவன் நினைவு இருக்கவே இந்த விரதங்களும் ஜபங்களும். (ஹரிஜன் 18-4-36)

முற்றும்



# கண்ணன் வழிபட்ட கண்ணன்

ரா. கணபதி

மக்களுக்கு வழி காட்டுவதற்காக அவதார புருஷர்களும் பக்தி புரிவார்கள்!' இவ்வாறு ஸ்ரீ ராமன் வழிபட்ட மூர்த்தியே இன்று நாம் காணும் ஸ்ரீ ரங்கநாதன் என்பர். கண்ண பெருமான் வழிபட்ட மூர்த்தியும் உண்டு. வசுதேவரும் தேவகியும் பூஜித்து வந்த விக்கிரகம் கண்ணபெருமானிடம் குலதனமாக வந்தது. வசுதேவரும் தேவகியும் பூர்வத்திலும் இரு ஜன்மங்களில் தம்பதியாக இருந்து பரமனுக்குப் பெற்றோர்களாக இருந்தவர்கள். இந்த மூன்று ஜன்மங்களிலும் அந்த உத்தமத் தம்பதி ஆராதித்து வந்த மூர்த்தி ஸ்ரீ கிருஷ்ணன் வசம் வந்தது.

கண்ணன் தனது திருவிளையாடல்களை முடித்து, மண்ணுலகை விட்டு விண்ணுலகுக்குப் புறப்படுகையில், கொடிய கலியில் உலகை ரட்சிப்பதற்குத் தம் பிரதிநிதியாக இந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய்யுமாறு உத்தவருக்கு உத்தரவிட்டார்.

ஐயன் மறைந்தபின் துவாரகையைக் கடல் விழுங்கியது. அவன் வழிபட்ட மூர்த்தியை எப்படிக் கண்டுபிடிப்பது என்று உத்தவர் கலங்கினார். தேவகுருவிடம் முறையிட்டார்.

உடனே வாயுதேவன் கொந்தளிக்கும் கடலிடை சுழிக்காற்றைப் புகுத்து, நீர்த்திரளைப் பிளந்து துவாரகாபுரி பகுதியைக் காட்டினான். அங்கிருந்த தேவகுரு பிருகஸ்பதி திவ்விய விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு சடுதியில் வெளி வந்தார். இந்த மூர்த்தியை எந்த இடத்தில் பிரதிஷ்டை செய்வது என்று ஞாலம் எங்கும் தகுந்த தலத்தைத் தேடினர். கேரளத்தில் ஓர் இடத்தில் பரமேசுவரன் தனது ஆலயத்திலிருந்து வெளிப்பட்டு, "இங்கே பிரதிஷ்டை செய்யுங்கள். நான் அருகேயுள்ள அம்பிகாபுரத்துக்குப் போகிறேன்" என்றான்.

அவ்வாறே அந்த இடத்தில் விக்கிரகம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. தேவர்களுக்குக் குருவான பிருஹஸ்பதியும், வாயுவும் சேர்ந்து



பிரதிஷ்டை செய்ததால் அத்தலம் குருவாயூர் என்று பெயர் பெற்றது.

சங்க, சக்கர, கதா, பதுமங்களுடன் சதுர்புஜனாகவே கண்ணன் ஜனித்தவுடன் பெற்றோருக்குத் தரிசனம் தந்தான். குருவாயூரில் சதுர்புஜமூர்த்தியாக விளங்கும் பெருமானை உருவ லட்சணப்படி ஸ்ரீமந் நாராயணன் என்றே சொல்லலாம். எனினும், கண்ணனாகவே கருதி வழிபடுகிறோம். குருவாயூர் அப்பன் லாவண்ய மோகன பாலவடிவினனாக இருப்பதால், பால ரூபத்தில் கிருஷ்ணனை வழிபடுவதே பொது வழக்காதலால், குருவாயூரப்பனை ஸ்ரீ கிருஷ்ணனாகக் கொள்கிறோம். *

---

* மேலே கூறிய இந்த மூர்த்தியையே இன்றும் மேலட்டையில் ஓவியர் நடராஜனின் வண்ணத்தில் காண்கிறோம்.

இங்கு கண்ணனுக்கு இடம் தந்த முக்கண்ணன் திருக்கோயில்களில் சிரேஷ்டமானது சிதம்பரம். ஞானவெளியான சிதம்பரத்தில் ஐயன் சந்நிதிக்குச் சிற்றம்பலம் என்று பெயர். குருவாயூரப்பனின் சந்நிதானமும் 'சித்தம்பலம்' என்றே வழங்குகிறது.

ஃ ஃ ஃ

குருவாயூர் என்ற மாத்திரத்தில் அந்திம காலத்தில் துரியாசிரமம் தழுவித் தேகம் துறந்த - மதுர வாக்கும் மதுர - மனமும் கொண்ட - செங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்த ராம தீக்ஷிதரவர்களின் நினைவு உண்டாகிறது. கேரளப் பிரசித்தி பெற்ற குருவாயூரை அகில தேசப் பிரசித்தமாக்கிய புண்ணிய புருஷர் அவர். குருவாயூர் என்றால் தீக்ஷிதர், தீக்ஷிதர் என்றால் நாராயணீயம் இப்படி நினைவு படரும்.

நாராயண பட்டத்ரி இயற்றியது, நாராயணனைக் குறித்து இயற்றியது என்ற இரண்டு விதங்களில், ''நாராயணீயம்'' என்ற பெயரை இந்நூல் பெற்றது.

மேப்பத்தூர் நாராயண பட்டத்திரி இளம் பருவத்தில் ஆசார விஹீனராக இருந்தவர். நிறையப் படித்தவர். ஆனால் படிப்பின் பயனாகப் பரமனை நினையாமல், வித்யா கர்வத்தில் மூழ்கியிருந்தார். அச்சுத பிஷாரோடி என்ற வியாகரண மகாவித்வான் இவரது அகக் கண்ணைத் திறந்து வைத்தார். நாராயண பட்டத்ரி பக்தி இன்பத்தில் திளைக்கத் தொடங்கினார். தமக்கு இந்தப் பேரின்பத்தைத் தந்த குருவுக்குப் பிரதி செய்யுமுகமாக, அச்சுத



பிஷாரோடியின் வாதரோகத்தைத் தாமே ஏற்றுக் கொண்டார் நாராயண பட்டத்திரி.

நோயின் கொடுமை உக்கிரமாயிற்று. அதிலிருந்து நிவாரணம் பெற என்ன செய்யலாம் என்று கேட்டறியப் பரம பக்தரும் மகாகவியுமான எழுத்தச்சனிடம் ஓர் ஆளை அனுப்பினார். எழுத்தச்சன் அந்த ஆளிடம், ''செய்வதென்ன? மீனைப் பிடித்து, அதைச் சிறுகச் சிறுக உண்டுவிட வேண்டும் என்று சொல்'' என்றார்.

அந்தணோத்தமரான பட்டத்திரியிடம் எப்படி எழுத்தச்சனின் யோசனையைத் தெரிவிப்பது என்று தூது போனவருக்கு ஒரே சங்கடமாகிவிட்டது. தயங்கித் தயங்கிச் சொன்னார்.

மின்னல் மின்னுவது போல் அதன் உள் அர்த்தம் பட்டத்திரிக்கு ஸ்புரித்துவிட்டது. மத்ஸ்யாவதாரத்திலிருந்து தொடங்கித் தசாவதாரம் செய்த பகவானை அப்படியே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, அவனைத் தமக்குள்ளேயே ஆக்கிக் கொண்டுவிட வேண்டும் என்று புரிந்து கொண்டார். கவித் திறன் படைத்தவர்கள் தாம் மட்டிலுமாக பக்தி இன்பத்தை அநுபவிக்க மாட்டார்கள். அந்த இன்பத்தை மற்றோரும் பெறுமாறு பக்தி காவியம் செய்வார்கள். புஷ்பம் பூத்துத் தன்னை அலங்கரித்துக் கொள்வதோடு செடி திருப்தி அடைகிறதா? மணத்தை வாரி இறைத்து, மற்றவர்களையும் இழுத்து அந்த அழகை ரசிக்க வைத்தாலே அதற்குத் திருப்தி!

எந்த இடத்தில் இருந்து கொண்டு பக்தி காவியம் செய்யலாம் என யோசித்தார் பட்டத்திரி. ஸ்ரீ கோயில் என்றே பெயர் கொண்ட குருவாயூர் ஆலயத்துக்கு விரைந்தார். ஸ்ரீ குருவாயூரப்பன் திருமுன்னர் ஸ்ரீமத் பாகவதத்தின் சுருக்கமாக ஆயிரத்துச் சொச்சம் அமுத சுலோகங்களில் நாராயணீயத்தைப் பாடினார்.

கதாநாயகன் வெறும் கற்சிலையாக இன்றி, உயிர் படைத்த கருணைமூர்த்தியாக நின்று, இந்தத் திவ்விய நூலை ஆமோதித்தான்.

ராமசரிதம் பாடுகையில் பட்டத்திரிக்கு ஒரு சங்கடம் ஏற்பட்டது. ராமன் சூடாமணியைப் பெறுகிற கட்டம். 'மௌளிரத்னம் ததௌ' என்று சுலோகம் தானே உருப்பெற்று வந்துவிட்டது. அந்த சுலோகம் பூர்த்தியாக இன்னும் ஓர் அட்சரம்தான் பாக்கி. ஆனால் 'ராமனுக்கு' என்று சொன்னபாடில்லை. ஒரே எழுத்தில் 'ராமனுக்கு' என்று எப்படிச் சொல்வது? ஊனக் குழந்தை பிறந்தால் தவிக்கும் தாயின் மனோபாவத்துடன் குருவாயூரப்பனைக் கண்ணும் கண்ணீருமாகப் பார்த்தார் பட்டத்திரி. அப்பன் சிரித்த திருமுகத்துடன் தன்னையே தட்டிக் காட்டிக் கொண்டான், 'நான்தான் ராமனாக இருந்தவன்' என்ற பொருள்பட. உடனே பட்டத்திரி 'தே' (உனக்கு) என்ற ஒரே அட்சரத்தைப் போட்டு 'மௌளி ரத்னம் ததௌ தே' என்று சுலோகத்தை நிறைவு செய்து மனமும் நிறைந்தார்.

சீதையை ராமன் வனத்துக்கு அனுப்பும் கட்டம். 'இப்படி ஒரு கொடூரம் நீ செய்திருக்கலாமா?' என்று ஸ்வாதீனமான எரிச்சலுடன் அப்பனைப் பார்த்தார் பட்டத்திரி. அப்பன் கலகலவென்று சிரித்தான். 'நான் கிருஷ்ணன் என்று லோகம் முழுதும் சொல்கிறது. ராமன் செய்த தவற்றுக்கு என்னிடம் ஏன் ஆத்திரப்படுகிறாய்?' என்றான்.

அப்பன் குறும்புக்காரன். ரத்தினத்தை வாங்கிக் கொள்வதற்கு மட்டும் ராமனாகி விடுகிறான்; வசவு என்று வந்தால் 'நானா ராமன்?' என்கிறான்.

நந்தகுமாரன் விந்தைகள் புரிந்த கட்டம். யசோதையிடம் அடம் பிடித்துக் கோபித்த கோவிந்தன் தயிர்ப் பானையை மத்தால் உடைத்து விட்டான் என்று பாடி விட்டார் பட்டத்திரி. பிறகு மூல பாகவதத்தைப் பார்க்கும்போது கண்ணன் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டுப் பானையை உடைத்தான் என்று அதில் இருப்பதைக் காண்கிறார். மகா கவியாயினும், பகவானைக் கண்ணுக்கு மெய்யாகக் கண்ட மகா பக்தராயினும், அவரது அடக்கத்தைப் பாருங்கள். சுகப் பிரம்மத்தின் வாக்கான பாகவதத்தை மாற்றிவிட்டோமே என்று மனம் நொந்து கொண்டார்.

பரிவு மின்னும் கண்களோடு பகவான் மறுமொழி சொன்னான்: ''சுகர் பாடியதும் உண்மை. நீ பாடியதும் உண்மை. முதலில் மத்தால்தான் உடைத்தேன். பானை நாலைந்து துண்டுகளாயிற்று. அதுவும் போதாதென்றுதான் கல்லை விட்டெறிந்து சுக்குநூறாக்கினேன். உன் வார்த்தை பொய்யாகாது.''

ஆதி காவியம் செய்த வால்மீகியிடம் 'உன் வாக்கில் பொய் வராது' என்று பிரம்மா ஆசி சொன்னார். அதே ஆசியை சர்வேசுவரனிடமிருந்து பெற்றார் பட்டத்திரி. நம்முடைய சிறிய அறிவின் கற்பனையாலே, அதில் பொய்யும் தோன்றக்கூடும். ஆனால் இந்தச் சிற்றறிவை அப்படியே பேரறிவில் அடியோடு கரைத்து விட்டால் சத்தியம் தவிர வேறெது எண்ணத்தில் எழும்? மகத்தான நிலை அது!

வாயுபுரத்து ஈசன் பட்டத்திரியை வாயாரப் பாட வைத்து அவரது வாயு ரோகத்தைத் தீர்த்து வைத்தான்!

ஃ ஃ ஃ

பிணிகளை அகற்றும் சக்தி சிற்சில மூர்த்தங்களில் விசேஷமாகப் பொலிகிறது. அப்படிப்பட்ட ஒருவன் குருவாயூரப்பன். பலவிதங்களிலும் திருவிளையாடல் புரிந்து, ''நான் கண்கண்ட தெய்வம்; ஜீவசக்தியுடன் மனிதர்களுடன் உறவாடுகிற கருணைமூர்த்தி'' என்று குருவாயூரப்பன் பிரதிதினமும் நிரூபித்து வருகிறான்.

இந்தப் பேருளுக்கு மிகவும் பாத்திரமான ஒருவர் நாராயண பட்டத்திரியின் சமகாலத்தவரான பூந்தானம் நம்பூதிரிப் பாடு. அவர் நாராயண பட்டத்திரியைப் போல் மகாவித்வான் அல்ல. எளிமை ததும்பும் மலையாளத்தில் அப்பனைப் பாடினவர். தமது பாடலை நாராயண பட்டத்திரியிடம் சமர்ப்பித்து, ''தாங்கள் இதனைத் திருக்கண் சாத்தித் தர வேண்டும்'' என்று வேண்டினார். சர்வ சாஸ்திர பாரங்கதரான நாராயண பட்டத்திரிக்கு, 'இந்தப் பூந்தானமுமா காவியம் செய்கிறான்?' என்று ஏளனமாயிருந்தது. அகம்பாவம் யாரைத்தான் விட்டது? ''என் பொழுதை உம் நூலுக்காகச் செலவழிப்பதற்கில்லை'' என்று நறுக்கென்று சொல்லிவிட்டார் பட்டத்திரி.

எளிய பூந்தானம் அப்பனிடமே சென்று கண்ணீர் உகுத்தார். அப்பன் சிலா ரூபத்திலிருந்து வெளிப்பட்டான். பட்டத்திரியிடம் சென்றான். "மகா புத்திமானே! எனக்குப் புத்திமானைவிட பக்திமானே பெரியவன். விபக்தியைவிட பக்தியே எனக்குப் பெரிது. உன்னுடைய நாராயணீயத்தை விடப் பூந்தானத்தின் பாடல்களே எனக்குப் பெரிது" என்றான். விபக்தி என்றால் வேற்றுமை உருபு, அதாவது இலக்கணம்.

பட்டத்திரி பூந்தானத்தின் தாள் பணிந்தார். மமதை என்ற மாசு விலகிப் பூரணத்துவம் பெற்றார்.

பூந்தானத்தின் இருப்பிடம் அங்காடிபுரம். அது குருவாயூரிலிருந்து முப்பத்தைந்து மைல். தோளில் மூட்டையும், கையில் பனங்குடையுமாக ஒரு நாள் பூந்தானம் குருவாயூருக்குத் தனியே கிளம்பினார். நள்ளிரவில் காட்டு வழியில் கள்ளர்களிடம் சிக்கிக் கொண்டார். அவரது மூட்டையில் பழந் துணி தவிர வேறு எதுவும் இல்லை. அவர் விரலில் போட்டுக் கொண்டிருந்த மோதிரத்தைத் தவிர அவரிடம் வேறு விலை மதிப்புள்ள பொருள் ஏதும் இல்லை. திருடர்களுக்கு எரிச்சல் வந்தது. ஆத்திரத்தில் அவரையே வேலை தீர்த்து விடக் கத்தியை உருவினான் கள்ளர் தலைவன்.

பூந்தானம் இறைவனின் பூந்தாட்களைத் தியானித்தார்.

மறு கணமே ஓர் உயர் ஜாதிப் புரவி அவர் பக்கலில் வந்து நின்றது. ஜாமொரின் மன்னரின் சேநாதிபதியான மாவீரன் மங்கத்து அச்சன் குதிரையிலிருந்து குதித்தான்.

அவ்வளவுதான், கள்வர் கூட்டம் தப்பினோம் பிழைத்தோம் என்று ஓடி மறைந்தது.

மங்கத்து அச்சனை வணங்கினார் பூந்தானம். "என் அன்புக் காணிக்கையாக இதை ஏற்க வேணும்" என்று கூறித் தமது மோதிரத்தை அவனுக்கு நிர்ப்பந்தமாக அளித்து ஏற்க வைத்தார். குருவாயூர் சென்றடைந்தார்.

குருவாயூர் தரிசனங்களில் தலைசிறந்ததாகக் கருதப்படும் நிர்மால்ய தரிசனத்துக்காக, அதிகாலைக்கு வெகு முன்னரே ஆலயம் சென்றார்.

கருவறைக் கதவு திறந்து, கோலாகல தரிசனம் நடக்கும் போது அற்புதம் கண்டார் பூந்தானம். மங்கத்து அச்சனிடம் அவர் தந்த மோதிரம் இதோ குருவாயூரப்பனின் திருவிரலில் ஜொலிக்கிறது!

இந்தப் பழைய கதையின் புதிய பிரதியையும் அப்பன் சமீபத்தில் நிகழ்த்திக் காட்டியிருக்கிறான். பிரபல டாக்டரொருவர், தம் மனைவியுடன் திருச்சூர் வழியாகக் குருவாயூர் சென்றார். திருச்சூரில் வேறு வாகன வசதி கிடைக்காமையால் ஜட்காவில் குருவாயூருக்குச் சென்றனர். ஜட்காக்காரன் நடுவுள்ள வழியில் வண்டியைச் செலுத்தி, ஒரு கள்ளக் கூட்டத்திடம் டாக்டர் தம்பதியை அழைத்துச் சென்று விட்டான்.

அந்த அம்மாள் தன் நகைகளைக் கழற்றத் தொடங்கினாள். இதோ வைர மூக்குப் பொட்டைக் கழற்றியாகிவிட்டது.

அப்போது 'சர்' என்ற சத்தத்துடன் ஒரு டாக்ஸி வந்து நின்றது, அந்த எட்டாக்கைப் பொட்டலிலே.

காலியாக வந்து நின்ற டாக்ஸியில் ஏறிக் கொண்டு குருவாயூர் சேர்ந்தனர், டாக்டர் தம்பதி இருவரும் வியந்தபடி.

அதைவிடப் பெரு வியப்பு மறு நாள் நிர்மால்ய தரிசனத்தின் போது கிடைத்தது. முதல் நாளிரவு டாக்ஸிக்காரனிடம் டாக்டர் பிடிவாதமாகத் திணித்த மோதிரம் குருவாயூர் அப்பனின் பாதத்தில் மிளிர்கிறது!

ஃ ஃ ஃ

இப்படி அனந்தம் லீலைகள்.

குருவாயூரப்பனை வழிபடும் ஒருவருக்குக் காய்ச்சல். அவருடைய சின்னஞ் சிறு பிள்ளை அப்பாவுக்குப் பதிலாக அமுதனுக்கு அமுது படைத்து நிவேதனம் செய்கிறான். ஸ்வாமி உண்மையாக உண்பார் என்று அவனுக்கு எண்ணம். எனவே, அவர் உண்ணாதது கண்டு தவியாகத் தவிக்கிறான். "ஓ, ஊறுகாய் போடவில்லை. அதுதான் சாப்பிடமாட்டேன் என்கிறாயா?" என்று கேட்டு ஊறுகாய் எடுத்து வரப் போகிறது கள்ளம் தெரியாப் பிள்ளை. திரும்பி வந்து பார்த்தால் இங்கே அப்பன் எல்லாவற்றையும் கம்பீரமாக உண்டு விட்டு ஏப்பம் விடுகிறான். ஊறுகாய்க்குக் காத்திராமல் அன்பு ஊறு பழம் அல்லவா அவன்?

பரம ஏழை மாது ஒருத்தி தனக்கு மாங்கல்யப் பிச்சை அளித்த அப்பனுக்கு மாங்கல்யத்தைச் சாத்தி நமஸ்கரித்து எழுகிறாள்.

வணங்கக் குனியும்போது கழுத்தில் ஏதோ ஒரு கனம். எழுந்திருக்கையில் நெஞ்சில் 'டிண்' என்று ஏதோ வந்து அடிக்கிறது.

குனிந்து பார்க்கிறாள். ஆகா, மீளவும் அவள் கழுத்திலேயே தொங்குகிறது, மாங்கல்யம்.

ஃ ஃ ஃ

ஆபத்பாந்தவனான அப்பன் ஆலயத்துக்குச் சென்ற ஆண்டு நவம்பர் 30ந் தேதி ஓர் ஆபத்து ஏற்பட்டது. பக்தர்களுக்கு 'ஷாக் ட்ரீட்மெண்ட்' செய்ய பகவான் இப்படியெல்லாம் விளையாடுவது வழக்கம். குருவாயூர் திருக்கோயில் தீ விபத்துக்கு உள்ளாகியது. அந்த ஊரின் அதிவிசேஷமான கார்த்திகை ஏகாதசி உற்சவத்தில் உற்பாதம் நிகழ்ந்தது.

உற்பாதத்திலும் ஓர் அருள் விந்தை. மூல விக்ரகத்துக்கோ, உடனுள்ள துர்காதேவி, கணபதி, சாஸ்தா ஆகிய மூர்த்தங்களுக்கோ, கொடி மரத்துக்கோ இம்மியும் ஹானி இல்லை.

திருப்பணி வேலையைத் தொடங்கினர். அப்பனிடம் மக்களுக்குள்ள பக்தி வெளிப்படும் அத்தாட்சியாயிற்று திருப்பணி. லட்சக்கணக்கில் பொருள் சேர்ந்துள்ளது. இன்னும் வேண்டும். நமக்குச் சகலமும் வழங்கும் சர்வேசுவரனுக்கு நாம் வாரி வழங்க வேண்டும்.

புதிய நிர்மாணப் பணிக்கு மே முதல் தேதி ஸ்ரீ காஞ்சி காமகோடி இளைய ஸ்வாமிகள் அடிக்கல் நாட்டியுள்ளார்கள். ஆதிகுரு சங்கரர் ஆகாய மார்க்கமாக வந்து பூஜாக்கிரமங்களை அமைத்துத் தந்த ஆலயம் இது. தேவகுரு பிருஹஸ்பதி ஸ்தாபித்த ஆலயம் இது. இத்தலப் பணியில் காஞ்சி ஜகத்குரு பங்கு கொண்டது மிகப் பொருத்தம்.

குருவாயூர் 'கைங்கரியத்துக்குப் பணம் கொழிக்கட்டும்! பணி செழிக்கட்டும்! பக்தி பெருகட்டும்!

# சீங்கக் கழுகு

பீட்டர் ஓ டான்னல்

(18)












மாடஸ்டி ஹோட்டலுக்குத் திரும்பி காலினின் அறையை அடைகிறள்.

இது என்ன புது மாதிரி நடனம்?

ஒற்றைக் கையால் 'டை' கட்டிக் கொள்வது இப்படித்தான்!

நீ புறப்பட்டுப் போய் ரொம்ப நேரமாயிற்றே? அந் தக் கோடீசுவரன் என்ன சொன்னன்?

எல்லாம் கச்சிதமாய் முடிந்தது. ஆனல் அவ னுக்கு என்னை அனுப்பி வைக்கவே மனம் வர வில்லே. வாய் ஓயாமல் நான் அவனேடு பேசிக் கொண்டே யிருக்க வேண்டுமென்கிறன்.

உனக்குப் பொறுமை யாய் இல்லே?

எனக்குக் குண்டுக் காயத்தைச் சொல் தப்படுத்தி, 'டை' கட்டிக் கொள்ள வும் இப்போ உதவு கிறயே; — இப்படி அவனுக்கு நீ செய் தால் பொறுமைப் படுகிறேன்!

1793

அந்தக் குழந்தை களை நீ போய்ப் பார்க்க வேண்டு மல்லவா?

ஆம்; ஒரு வாரத் துக்குள் வந்து சந்திப்பதாய்ச் சொல்லி யிருக்கிறேன்.

மாக்ஸுக்கு ஏற் பட்ட துர்மர ணம் காரணமாக வெனிஸுக்கு மறுபடியும் போவது உனக்குக் கஷ்ட மாயிருக்குமே?

உண்மை. ஆயினும் அக்குழந்தைகளை நான் பார்த்தேயாக வேண்டும்... அது சரி, இப்போ நாம் எங்கே புறப்படுகிறேம்?

அருமையான ஓர் உணவு விடுதியைக் கண்டுபிடித் திருக்கிறேன். இதமான சூழ்நிலை; சுவையான உணவு. இளம் காதலர்கள் இன்பமாய்ப் பொழுது போக்க ஏற்ற இடம்!

(முற்றும்)

அத்தியாயம் முப்பத்திரண்டு

## இறுதிக் கட்டம்

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

நந்தினி திரும்பிச் சென்று தனது அறைக்குள் வருவதற்காக ஏற்பட்ட பிரதான வாசலின் கதவைச் சாத்தித் தாளிட்டு வந்தாள். பின்னர், கையில் தீபத்துடன் வேட்டை மண்டபத்தின் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பிரவேசித்தாள்.

மந்திரவாதி ரவிதாஸன் முன்னமே கோரமான முகமுடையவன். முகத்திலும் தலையிலும் புதிதாக ஏற்பட்டிருந்த காயங்களினால் அவனுடைய தோற்றம் மேலும் கோரம் அடைந்திருந்தது.

நந்தினி அதைப் பார்த்துவிட்டு, ''மந்திரவாதி! இது என்ன, உன் உடம்பெல்லாம் புதுக் காயங்கள்?'' என்றாள்.

''ராணி! இதிலே தங்களுக்கு வியப்பு என்ன? தங்களைப் போல் நாங்கள் அறுசுவை உண்டி அருந்தி, பஞ்சணை மெத்தையில் சொகுசாய்ப் படுத்துக் காலங் கழிப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறீர்களா? நானும் பரமேசுவரனும் இன்று பிழைத்து வந்திருப்பதே பெரிய காரியம். இறந்து போன பாண்டிய சக்கரவர்த்தியின் ஆவிதான் எங்களை இன்று உயிரோடிருக்கும்படி காப்பாற்றியது....''

''இல்லை, ரவிதாஸா! இல்லை! அவருடைய ஆவி என்னுடனேயே சதா சர்வ காலமும் இருக்கிறது. ஒரு நாழிகைக்கு முந்திக்கூட என் முன்னால் தோன்றிச் சபதத்தை நிறைவேற்றப் போகிறாயா, இல்லையா?'' என்று கேட்டது.

''ராணி! அதற்குத் தாங்கள் என்ன பதில் சொன்னீர்கள்?''

''சபதத்தை இன்று நிறைவேற்றுவேன்; இல்லாவிடில் உயிரை மாய்த்துக்கொள்வேன்'' என்று சொன்னேன்.

''அப்படியானால் நாங்கள் ஓடோடியும் வந்ததே நல்லதாய்ப் போயிற்று. இத்தனை காலங் கழித்து நீங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளுவதில் யாருக்கு என்ன லாபம்? எடுத்த காரியம் அல்லவோ முடிவு பெற வேண்டும்? தங்களால் முடியாது என்றால்....''

''முடியாது என்று யார் சொன்னார்கள்? சபதத்தை நிறைவேற்றுவேன்; அதற்குப் பிறகு என்னுடைய உயிரை மாய்த்துக் கொள்வேன்.....''

''வேண்டாம், வேண்டாம். சபதத்தை நிறைவேற்றிய பிறகு தாங்கள் செய்யக் கூடிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. மதுரையில் வீரபாண்டியனுடைய திருக்குமாரனுக்கு உலகமறியப் பட்டாபிஷேகம் செய்தாக வேண்டும்....''

''அதையெல்லாம் நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள். இன்று இரவு என் வேலை முடிந்து விடும்; என் வாழ்வும் முடிந்துவிடும்....''

''ராணி! பழுவேட்டரையருடைய பொக்கிஷத்தில் உள்ள திரவியங்கள் எல்லாம் மலைநாட்டுக்குப் போய்ச் சேர வேண்டும். அதற்குத் தங்கள் உதவி தேவையாயிருக்கிறது!''

''சபதம் முடிந்த பின்னரும் என் கணவரை ஏமாற்றிக் கொண்டு உயிர் வாழச் சொல்கிறாயா, மந்திரவாதி!''

''அம்மணி! தங்கள் கணவர் யார்?''

''உலகறிய என்னை மணந்து, நாடு நகரங்களில் உள்ளவர்களின் பரிகாசங்களை யெல்லாம் பொருட்படுத்தாமல், என் ஒவ்வொரு சபலத்தையும் நிறைவேற்றிக் கொண்டு வருகிற உத்தமரைத் தான் சொல்கிறேன்......''

''ராணி! பழுவேட்டரையர் தங்கள் கணவர் அல்ல. ஒவ்வொரு நாள் இரவும் வீரபாண்டியர் என் கனவில் வந்து தங்களை அவருடைய பட்டமகிஷியாக நடத்தும்படி கட்டளையிடுகிறார்....''

''மந்திரவாதி! அவர் பேச்சு வேண்டாம். இந்தக் காயங்களெல்லாம் உனக்கு எப்படி ஏற்பட்டன என்று சொல்லவில்லையே?''

''நேற்றிரவு கொள்ளிடக் கரைக் காட்டில் எங்களை ஒரு கிழப் புலி தாக்கியது. கிழப் புலியானாலும் பற்களும் நகங்களும் மிகக் கூராயிருந்தன.....''

''எப்படித் தப்பி வந்தீர்கள்?''

''பாண்டிய குமாரருக்குப் பட்டாபிஷேகம் நடத்தினோமே? அந்தப் பள்ளிப் படை கோபுரத்தில் இடிந்திருந்த பகுதியை அந்தப் புலியின் பேரில் தள்ளி விட்டுத் தப்புவித்து வந்தோம்.....''

''ஐயோ! பாவம்! கிழப் புலியைக் கூட நீங்கள் நேர் நின்று சண்டையிட்டு ஜயிக்க முடியவில்லை.....!''

''ஆம், ராணி! ஒப்புக் கொள்கிறேம். அப்படி யிருக்கும்போது இளம் புலியாகிய ஆதித்த கரிகாலனை நேருக்கு நேர் எதிர்ப்பது எப்படி? அதனுலேதான் தந்திர மந்திரங்களைக் கையாள வேண்டி யிருக்கிறது. தேவி! இன்றிரவு தப்பிஞல் அப்புறம் நமக்குச் சந்தர்ப்பம் கிட்டப் போவதில்லை. சுந்தர சோழனையும் அருள்மொழிவர்மனையும் பற்றிச் செய்தி வந்துவிட்டால், பிறகு ஆதித்த கரிகாலன் நம்மிடம் அகப்படப் போவதில்லை.........'' என்ருன் ரவிதாஸன்.

''மந்திரவாதி! அவர்களைப் பற்றி என்ன? ஏதாவது நிச்சயமாகத் தெரியுமா?'' என்று கேட்டாள் நந்தினி.

''இத்தனை நேரம் அவர்களுடைய ஆயுள் முடிந்திருக்கும், சந்தேகமில்லை.''

''நீயும் தேவராளனும் ஈழத்துக்குப் போனபோது இப்படிச் சொல்லிவிட்டுத்தான் போனீர்கள்.''

''அங்கே அந்த ஊமைப் பைத்தியம் ஓயாமல் எங்களைப் பின்தொடர்ந்து வந்து தொல்லை கொடுத்தது. அதனுல் தான் முடியவில்லை....''

''வாணர் குலத்து வீரன் கடலில் மூழ்கி இறந்து விட்டதாகச் சொன்னீர்கள். அவனும் தப்பிப் பிழைத்து வந்து விட்டான்.....''

''பள்ளிப்படைக் காட்டில் அவனை வேலை தீர்க்கச் சந்தர்ப்பம் கிடைத்தது. தாங்கள் தடுத்து விட்டீர்கள்.''



"அதற்கு முக்கிய காரணம் இருப்பதாகச் சொன்னேன்....."

"அது என்ன முக்கிய காரணமோ தெரியாது. அவன் இங்கே வந்து ஆதித்த கரிகாலனை இரும்புக் கவசம் போல் பாதுகாத்து வருகிறான்."

"அதைப் பற்றி நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம்."

"கவலைப்பட்டே தீரவேண்டியிருக்கிறது. இன்று இல்லாவிட்டால் என்றைக்கும் இல்லை. தேவி! என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்? நாங்கள் என்ன செய்ய வேண்டும்?"

"இந்தச் சமயத்தில் நீங்கள் ஒருவரும் இங்கு வராதிருந்தாலே எனக்குப் பெரிய உதவியாயிருக்கும்....."

"அது ஒரு நாளும் முடியாத காரியம்."

"என்னிடம் உங்களுக்கு அவ்வளவு நம்பிக்கை இல்லை....."

"நம்பிக்கை இருப்பதினால் தான் வந்திருக்கிறோம். சபதம் முடிந்த பிறகு தங்களைப் பத்திரமாக அழைத்துக் கொண்டு போவதற்காக வந்திருக்கிறோம். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டால் அதற்கும் தயாராயிருப்போம். எந்த நிமிஷமும் தாங்கள் எங்களை உதவிக்கு அழைக்கலாம்."

"நான் போட்டிருக்கும் திட்டத்தில் தடங்கல் எதுவும் ஏற்படாது. சபதம் முடிந்த பிறகு நான் உயிரோடிருக்கவும் விரும்பவில்லை."

"கூடவே கூடாது! தாங்கள் எங்களுடன் வந்தே தீரவேண்டும். இல்லையென்றால்...."

"மந்திரவாதி! சபதம் முடிந்தபிறகு ஒரு நிமிஷமும் நான் பெரிய பழுவேட்டரையர் வீட்டில் இருக்க மாட்டேன்."

"அப்படியானால் நீங்கள் எங்களுடன் வந்து விடுங்கள்!"

"என்னை எப்படி அழைத்துக் கொண்டு போவீர்கள்?"

"இந்தச் சுரங்கப் பாதையின் முடிவில் ஐயனார் கோயில் இருக்கிறது. அதன் அருகில் உள்ள காட்டில் பழுவூர் ராணியின் பல்லக்கைத் தயாராக வைத்திருக்கிறோம். இடும்பன்காரி பல்லக்கைச் செப்பனிடுவதற்கென்று முன்னமே





"தபால்காரர் என்ன கொடுத்துட்டுப் போறார்? உன் கணவருக்கு ஸ்கூட்டர் ஓட்ட லைசென்ஸா?"

"ஆமாம்! இதை உடனே அவரிடம் காட்ட ஆஸ்பத்திரிக்கு எடுத்துண்டு போகணும். ஆக்ஸிடெண்ட் ஆகிப் படுத்துண்டிருக்கிறவருக்கு ஆறுதலாயிருக்கும்!"

வெளியிலே கொண்டு வந்துவிட்டான். வீர பாண்டியனின் தலையைக் கொய்தவனைப் பழி வாங்கிய தேவியை நாங்களே பல்லக்கில் வைத்துத் தூக்கிச் செல்வோம். பொழுதுவிடிவதற்குள் கொல்லி மலைக்குப் போய்விடுவோம்."

"நீங்கள் எத்தனை பேர் இந்த இடத்தில் இருக்கிறீர்கள்?"

"இங்கே நாலு பேர் இருக்கிறோம்!" என்று கூறிவிட்டு ரவிதாஸன் மெதுவாகக் கையைத் தட்டினான்.

அந்த மண்டபத்தில் இருந்த பயங்கரமான செத்த மிருகங்களுக்குப் பின்னால் ஒளிந்திருந்தவர்கள் சிறிது வெளிப்பட்டு முகத்தைக் காட்டினார்கள்.

"பரமேசுவரன் எங்கே?" என்று நந்தினி கேட்டாள்.

"அவனை வெளியில் நிறுத்தியிருக்கிறேன். ஐயனார் கோயிலில் காளாமுகன் ஒருவன் நிஷ்டை செய்து கொண்டிருந்தான். அவனை அங்கிருந்து போகச் சொல்வது பெரிய தொல்லையாய்ப் போய் விட்டது. மறுபடியும் அவன் அங்கு வந்து விடாமல் பார்த்துக் கொள்ளும்படி தேவராளனைக் கோயில் வாசலில் நிறுத்தி விட்டு வந்திருக்கிறேன்..."

"காளாமுகனைப் பற்றி நமக்கு என்ன கவலை? மந்திரவாதி! பெரிய பழுவேட்டரையரைப் பற்றிய செய்தி தெரியுமா?" என்று நந்தினி கேட்டாள்.

ரவிதாஸன் சிறிது திடுக்கிட்டு, "என்ன செய்தி?" என்றான்.

"அவர் தஞ்சாவூருக்குப் பிரயாணப்பட்டுப் போனார் அல்லவா? வழியில் கொள்ளிடத்தைப் படகில் கடக்கும் போது புயல் அடித்துப் படகு கவிழ்ந்து விட்டதாம். பழுவேட்டரையர் கரை யேறவில்லை யென்றும், தண்ணீரில் மூழ்கிப் போய் விட்டதாகவும் சம்புவரையனுக்கு இன்று சாயங்காலம் செய்தி வந்திருக்கிறதாம்!"

"தெய்வமே! அவர் கதி அப்படியா ஆயிற்று? இத்தனை நேரம் தாங்கள் இந்த முக்கிய விவரத்தைப் பற்றிச் சொல்லவில்லையே?"

"அதை நான் நம்பவில்லை, மந்திரவாதி! பழுவேட்டரையர் கொள்ளிடத்தில் மூழ்கி இறந்திருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை."

"எனக்கும் அந்தச் செய்தியில் நம்பிக்கை இல்லை, ராணி!"

"அவர் கொள்ளிடத்தின் இக்கரைக்கு நீந்தி வந்திருந்தால் என்ன செய்கிறது? ஒருவேளை இன்றிரவு இங்கு வந்து விட்டால்?.... இதைப் பற்றித்தான் சிறிது கவலைப்படுகிறேன்...."

"ராணி! அதைப் பற்றித் தங்களுக்குக் கவலை வேண்டாம். இப்போது தான் எனக்கும் நினைவு வருகிறது. கொள்ளிடத்துக்கு அக்கரையில் தஞ்சாவூர்ச் சாலையில் ஆஜானுபாகுவான மனிதர் ஒருவரை நேற்றிரவு பார்த்தேன். ஆடைஆபரணம் ஒன்றும் அவர் அணிந்திருக்கவில்லை. இருட்டாகவும் இருந்தபடியால் அடையாளம் தெரியவில்லை. இப்போது யோசித்தால், அந்த வழிப்போக்கர் ஒரு வேளை பெரிய பழுவேட்டரையராகத்தான் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது!"

"அப்படியானால், நிச்சயமாக இன்றிரவு அவர் இங்கே வந்துவிட மாட்டார் அல்லவா?"

"மாட்டவே மாட்டார்! அதைப் பற்றித் தாங்கள் தைரியமாக இருக்கலாம். இப்பொழுது எங்களுக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள்?"

"மந்திரவாதி! நீங்கள் இங்கேயே பொறுமையுடன் காத்திருக்க வேண்டும். என்னுடைய அறையில் என்ன நடப்பதாகத் தோன்றினாலும், எத்தனை பேருடைய பேச்சுக் குரல் கேட்டாலும் அவசரப்பட்டு உள்ளே வரவேண்டாம். வந்தால் காரியம் கெட்டுப் போகும். நான் குரல் கொடுத்தபிறகு நீங்கள் வந்து சேருங்கள்!"

"ராணி! தாங்கள் எப்படிக் குரல் கொடுப்பீர்கள்?"

"மந்திரவாதி! நான் கலகலவென்று சிரித்துப் பல வருஷங்கள் ஆயிற்று என்று தெரியும் அல்லவா? நான் சிரித்து நீ கேட்டேயிருக்க மாட்டாய்!"

''தேவி! ஒரே ஒரு சமயம் அந்தத் துஷ்ட வாலிபன் வந்தியத்தேவனுடன் பேசிக் கொண்டிருந்த போது நீங்கள் சிரிக்கக் கேட்டேன்....''

''ஆகா! அதைக்கூட ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாயா? நல்லது! இன்றைக்கு நான் கலகல வென்று உரத்துச் சிரிக்கும் சத்தம் கேட்டால் நீங்கள் இரகசியக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வாருங்கள். காரியம் முடிந்து விட்டதற்கு அது அடையாளம். இப்போதும் வந்தியத்தேவனைப் பார்த்தே நான் சிரித்துக் கொண்டிருந்தாலும் இருப்பேன். அதைப் பற்றி நீங்கள் ஆச்சரியப்பட வேண்டாம்....''

''தேவி! தங்களுடைய உத்தேசம் என்னவென்பது ஒருவாறு இப்போது எனக்குத் துலங்குகிறது.....''

''கொஞ்சம் பொறுத்திருந்தால், எல்லாம் துலாம்பரமாகி விடும். எதிர்பாராத தடங்கல் ஏதாவது ஏற்பட்டு விட்டால், அப்போது என் அழுகைக் குரல் கேட்கும். உடனே வந்து சேருங்கள்....''

''அப்படியே செய்வோம், ராணி! ஆனால் தங்கள் அழுகைக் குரல் கேட்க நான் விரும்பவில்லை. சிரிப்புக் குரலைக் கேட்கத்தான் விரும்புகிறேன்'' என்றான் மந்திரவாதி ரவிதாஸன்.

## அத்தியாயம் முப்பத்துமூன்று

# "ஐயோ! பிசாசு!"

அதே சமயத்தில் வந்தியத்தேவன் மிக்க மனச் சோர்வுடன் கடம்பூர் மாளிகையைச் சேர்ந்த நந்தவனத்தில் உலாவிக் கொண்டிருந்தான். அந்த நந்தவனம் மாளிகையில் வெளி மதில் சுவர் ஓரமாக அமைந்திருந்தது. இரவில் மலரும் புஷ்பங்கள் அப்போதுதான் மடலவிழ்ந்துகொண்டிருந்தன. பன்னீர், பாரிஜாதம், மல்லிகை, முல்லை முதலிய மலர்களின் நறுமணத்தை ஐப்பசி மாதத்தின் வாடைக் காற்று அவன் பக்கமாகக் கொண்டு வந்து வீசியது. ''ஆகா! இந்த நேரத்தில் பழையாறை அரண்மனை நந்தவனத்தில் நாம் இருக்கக் கூடாதா? அப்படியிருக்கும்போது திடீரென்று குந்தவை தேவியின் பாதச் சிலம்பு ஒலிக்கக் கூடாதா?'' என்று அவன் மனம் எண்ணமிட்டது. ''இங்கே வந்து இந்தக் கடம்பூர் அரண்மனையில் அடைபட்டுக் கிடக்கிறோமே? வெறி பிடித்த இளவரசரிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறோமே?'' என்று நினைத்தான். ஆதித்த கரிகாலர் என்றுமில்லாதவண்ணம் அன்று மாலை அவன் மீது சீறி எரிந்து விழுந்ததும், ''இனி இன்றைக்கு என் முகத்தில் விழிக்காதே! நாளைப் பொழுது விடிந்த பிறகு உன்னைப் பற்றி என் முடிவைத் தெரிவிக்கிறேன்'' என்று கூறியதும் அவன் மனத்தைப் புண்படுத்தியிருந்தன. ஒரு நாளுமில்லாதவிதமாக அவர் இன்று கோபித்துக் கொண்டு விட்டார். பாவம்! அவர் மீது குறைப்பட்டு என்ன பயன்! அவர் உள்ளம் அவ்விதமாகக் குழம்பிவிட்டிருக்கிறது. அவர் நிலையை நினைத்துப் பார்க்கும் போது வந்தியத்தேவனுக்கு அவர் மீது பரிதாபமே உண்டாயிற்று.

அன்றெல்லாம் ஆதித்த கரிகாலரின் உன்மத்தம் உச்ச நிலையை அடைந்திருந்தது. உற்சாகமும் சோர்வும் கோபமும் குதூகலமும் சிநேகப் பான்மையும் கொடூரப் பகைமையும் மாறி மாறி அவரைப் பிடித்து ஆட்டி வைத்தன. அவரும் தம்மைச் சுற்றியிருந்தவர்களை அம்மாதிரி ஆட்டி வைத்துக் கொண்டிருந்தார். அடுத்த நிமிஷம் அவருடைய போக்கு எப்படியிருக்குமோ, என்ன செய்வாரோ என்று அருகிலிருந்தவர்கள் கதிகலங்கிக் கொண்டிருந்தார்கள்.

அன்றைக்குச் சூரியன் உதயமானதிலிருந்து வந்து கொண்டிருந்த செய்திகள் அவருடைய உன்மத்தத்தை அதிகமாக்க உதவி செய்து கொண்டிருந்தன.

சம்புவரையர் முதன் முதலாக அவரிடம் வந்து, திருக்கோவலூர் மலையமான் படை திரட்டிக் கொண்டு வருகிற செய்தியைத் தெரிவித்தார். அதைப் பற்றித் தமது ஆட்சேபத்தையும் கண்டனத்தையும் தெரிவித்துக் கொண்டார்.

''மலையமான் தொண்டு கிழவர்; வயது எண்பதுக்கு மேலாகிறது. அவர் வருவதைக் குறித்து உங்களுக்கு என்ன பயம்?'' என்றார் இளவரசர்.

''ஐயா! கொல்லிமலைத் தலைவன் வல்வில் ஓரியின் வம்சத்தில் வந்தவர்கள் நாங்கள். பயம் என்றால் இன்னதென்றே அறியாதவர்கள். தாங்கள் இங்கு விஜயம் செய்திருப்பதை முன்னிட்டே தயங்குகிறேன். தாங்கள் மட்டும் அனுமதி கொடுத்தால்....''

''கிழவரோடு போர் புரிவதற்கு உடனே புறப்பட ஆயத்தமாயிருக்கிறீர்கள். அவ்வளவுதானே! சம்புவரையரே! என் பாட்டனைப் படை

யுடன் புறப்பட்டு வரும்படி நான்தான் செய்தி அனுப்பினேன்!''

''எதற்காக, இளவரசே?''

''நான் இங்கே உங்களிடம் தனியாக அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன் அல்லவா? இங்கே இருக்கும்போது எனக்கு ஏதாவது நேர்ந்தால்....''

''கோமகனே! அப்படிப்பட்ட சந்தேகம் அணுவளவும் தங்கள் மனத்தில் இருந்தால், இந்தக் கணமே....''

''இங்கிருந்து என்னைக் கிளம்பிவிடச் சொல்கிறீர்களாக்கும்!''

''ஐயா! இது தங்களுடைய இராஜ்யம்; இது தங்களுடைய அரண்மனை. இதன் உச்சியில் புலிக்கொடி பறக்கிறது. இங்கிருந்து தங்களைப் போகச் சொல்வதற்கு நான் யார்? தாங்கள் அநுமதி கொடுத்தால் நானும் என் குடும்பத்தாரும் இங்கிருந்து போய் விடுகிறோம். மிலாடுடையார் மலையமானை வரவழைத்து வைத்துக் கொண்டு தாங்கள் நிச்சயம் நிர்ப்பயமாக இங்கே இருக்கலாம்....''

''ஓகோ! வல்வில் ஓரியின் வம்சத்தில் பிறந்த நீங்கள் பயமறியாதவர்கள் என்றும் விஜயாலய சோழரின் குலத்தில் பிறந்த நான் பயங்கொள்ளி என்றும் சொல்லிக் காட்டுகிறீரா?''

''இளவரசரின் வைர நெஞ்சமும் வீரதிறமும் உலகம் அறிந்தவை. பன்னிரண்டாம் பிராயத்தில் தாங்கள் சேவூர்ப் போர்க்களத்தில் புகுந்து பகைவர்களைச் சின்னாபின்னம் செய்து வீராதி வீரன் என்று பெயர் பெற்றீர்கள். பதினெட்டாம் பிராயத்தில் மறுபடியும் போருக்கு வந்த வீரபாண்டியனைத் தொடர்ந்து துரத்திச் சென்று ஒளிந்திருந்த இடத்தில் அவனைக் கண்டுபிடித்து, அவன் சிரத்தைத் துணித்துக்கொண்டு வந்தீர்கள்.''

இதைக் கேட்ட ஆதித்த கரிகாலன், ''தெரியும், ஐயா! தெரியும்! ஓடியவனைத் துரத்திய வீரப் புலி நான் என்றும், செத்துப் போன வீர பாண்டியனுடைய தலையை வெட்டிக் கொண்டு வந்தவன் என்றும் நீங்கள் எல்லாரும் என்னைப் பரிகசித்துப் பேசுவது எனக்குத் தெரியும்; அந்தப் பழுவூர் மோகினிப் பேய் அத்தகைய வதந்திகளைக் கிளப்பி விட்டிருக்கிறாள் என்பதும் எனக்குத் தெரியும்!'' என்று கூறிவிட்டுப் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

சம்புவரையருக்கு ஏன் இந்த வெறி கொண்ட இளவரசரிடம் பேச்சுக் கொடுத்தோம் என்று ஆகிவிட்டது.

''கோமகனே! நான் எது சொன்னாலும் தவறாகப் போய் விடுகிறது. தங்கள் உசிதம் எப்படியோ அப்படிச் செய்யுங்கள். நான் போய் வருகிறேன்.''

''போய் வருவது சரிதான்; ஆனால் இந்தக் கோட்டையை விட்டுப் போகும் எண்ணத்தை மட்டும் விட்டு விடுங்கள். இந்த அரண்மனையில் நான்கு மாதங்களுக்குமுன்னால் நடந்த சதியாலோசனையைப் பற்றிய உண்மையை அறிந்து கொள்ளும் வரையில் நானும் இந்த இடத்தைவிட்டுப் போகப் போவதில்லை. நீங்கள் போவதற்கும் விடப் போவதில்லை!'' என்றார் ஆதித்த கரிகாலர்.

சம்புவரையரின் உதடுகள் துடித்தன. உடம்பு நடுங்கியது. அவருடைய கண்களில் கண்ணீர் ததும்பியது.

இந்த நிலையைப் பக்கத்தில் இருந்த பார்த்திபேந்திரன் பார்த்தான்.

''கோமகனே! சோழகுலத்தவர் வீரத்துக்குப் புகழ் பெற்றது போலவே நீதிக்கும் பெயர் பெற்றவர்கள். இந்தப் பெரியவருக்குத் தாங்கள் நீதி செய்யவில்லை. தங்கள் வார்த்தைகளினால் அவருடைய மனத்தைப் புண்படுத்துகிறீர்கள். இங்கு நடந்த சிற்றரசர் கூட்டத்தைப் பற்றிச் சம்புவரையர் முன்னமே தக்க சமாதானம் சொல்லித் தாங்களும் ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். தாங்கள் இராஜ்யம் வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருப்பதாலும், தஞ்சாவூருக்குப் போகவே மறுப்பதாலும், சிற்றரசர்கள் சோழ ராஜ்யத்தின் நன்மையைக் கருதி அடுத்த பட்டத்துக்கு யார் என்பதைப் பற்றி யோசித்தார்கள். தாங்கள் இராஜ்ய பாரத்தை வகிக்க இசைந்தால், அவர்கள் ஏன் வேறு யோசனை செய்ய வேண்டும்? உலகமெல்லாம் வீரப் புகழ் பரப்பிய ஆதித்த கரிகாலர் இருக்கும் போது, போர்க்களத்தையே பார்த்தறியாத மதுராந்தகத் தேவனைப் பற்றி இவர்கள் கனவிலும் கருதுவார்களா?....''

ஆதித்த கரிகாலர் குறுக்கிட்டு, ''ஆமாம், ஆமாம்! நான் உயிரோடிருக்கும்போது இன்னொருவன் சோழ சிங்காதனம் ஏறுவது இயலாத காரியந்தான். அதற்காகத்தான் என்னை வேலை தீர்த்து விடப் பார்க்கிறீர்கள்!'' என்று கூறிவிட்டு மறுபடியும் ஹா ஹா ஹா என்று உரத்துச் சிரித்தார்.

''பார்த்திபேந்திரா! நீயும் இவர்களுடன் சேர்ந்து கொண்டதை நான் அறியவில்லையென்றா நினைத்தாய்? கந்தமாறனும் நீயும் அன்று நாம் வேட்டைக்குப் போன போது என் பின்னாலேயே வேலைக் குறி பார்த்துக் கொண்டு வந்தது எனக்குத் தெரியாது என்றா நினைத்தாய்? என் உண்மை நண்பனாகிய இந்த வந்தியத்தேவன் மட்டும் தெய்வாதீனமாக இங்கு வந்து சேர்ந்

திராவிட்டால், இதற்குள் என்னை யம னுலகத்துக்கு அனுப்பியிருக்க மாட்டீர் களா?'' என்று சொன்னார்.

பார்த்திபேந்திரன் வந்தியத்தேவனைக் கண்ணாலேயே கொன்று விடுகிறவனைப் போல் பார்த்துவிட்டு, ''ஐயா! இந்தப் பாதகன் ஏதேதோ சொல்லித் தங்கள் மனத்தைக் கெடுத்து விட்டான். தங்களுக்கு நான் மனத்தினாலும் துரோகம் எண்ணியதாக அவன் நிரூபித்துவிட்டால், இந்தக் கணமே...'' என்றான்.

''அப்பனே! உன் மனத்தில் எண்ணிய துரோகத்தை யார் எப்படி நிரூபிக்க முடியும்? நான் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல்! நீயும் கந்தமாறனும் பழுவூர் இளைய ராணியின் பேச்சைக் கேட்டு மயங்கித்தானே என்னை இங்கே அழைத்து வர இவ்வளவு பிரயத்தனம் செய்தீர்கள்? இதை இல்லையென்று மறுக்க முடியுமா?''

''அதை மறுக்கவில்லை, இளவரசே! மறுக்க வேண்டிய அவசியமும் இல்லை. பழுவூர் ராணி மிக நல்ல நோக்கத்துடனே இந்தக் காரியத்தில் தலையிட்டிருக்கிறார் என்பதை நான் நிச்சயமாக அறிவேன். தங்களை இங்கு தருவித்துக் கந்தமாறனுடைய சகோதரியைத் தங்களுக்கு மணம் புரிவித்துச் சோழ நாட்டில் எவ்வித உட்கலகமும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வதே அவருடைய நோக்கம். தங்களுடைய சிரவில் சோழ குலத்து மணிமகுடத்தை அணிவித்துப் பார்ப்பதைக் காட்டிலும் எங்களுக்கெல்லாம் மகிழ்ச்சி தரக்கூடியது வேறு ஒன்றுமில்லை. என்னை யாராவது குறை கூறினாலும் பொறுத்துக் கொள்வேன்; பழுவூர் ராணியைப் பற்றி நிந்தை சொன்னால், அவனை அக்கணமே இந்த வாளுக்கு இரையாக்குவேன்!'' என்று பார்த்திபேந்திரன் வந்தியத்தேவனைப் பார்த்துக்கொண்டே கூறி, அதே சமயத்தில் வாளையும் உறையிலிருந்து உருவினான்.

''ஆகா! என் வீர நண்பா! வாளை உறையிலே போட்டு வை! நல்ல சமயம் வரும் போது சொல்கிறேன். அப்போது வெளியில் எடுக்கலாம். வந்தியத்தேவன் பழுவூர் ராணியைப் பற்றி ஒன்றும் குறை கூறவில்லை. அவனும் உங்களைப் போலத்தான் மதிமயங்கி நிற்கிறான். உண்மையில், பழுவூர் இளையராணி என் உடன் பிறந்த சகோதரி என்று சத்தியம் செய்து கொண்டிருக்கிறான். அதைச் சொல்வதற்காகவே ஓடோடியும் வந்தான். உன்பேரில் அவன் வேறு குற்றம் சாட்டுகிறான். என் சகோதரனை நீ ஈழ நாட்டிலிருந்து உன் கப்பலில் அழைத்துக் கொண்டு வந்து வழியில் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டாய் என்று அவன் சொல்கிறானே? அதற்கு உன் பதில் என்ன?'' என்றார் கரிகாலர்.

அந்தச் சமயத்தில், ''நான் அதற்குப் பதில் சொல்கிறேன்!'' என்று கூறிக் கொண்டே கந்தமாறன் அங்கு வந்தான்.

''கோமகனே! மிகச் சந்தோஷமான செய்தி கொண்டு வந்திருக்கிறேன். சின்ன இளவரசர் கடலில் மூழ்கிச் சாகவில்லை. பொன்னியின் செல்வர் நாகைப் பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இத்தனை நாளும் மறைந்து இருந்து வந்தாராம். புயல் அடித்துக் கடல் பொங்கி நாகைப்பட்டினம் நகரில் புகுந்தபோது அவர் வெளிப்பட நேர்ந்ததாம். லட்சக் கணக்கான ஜனங்கள் புடைசூழ இப்போது தஞ்சாவூரை நோக்கிப் போய்க்




ஒரிஸ்ஸா ஆதிவாசிக் கிழ மாதை. ஒரு நாள் கடவுள் காண வந்திருந்தார். அவர் பெயர் அகஸ்புரியா குஸோடா! அவர் கிழவிக்குப் பரிசுகள் கொண்டு வந்திருந்தார். கிழவிக்குச் சந்தேகம் எழுந்தது. ''ஏன் எனக்கு இந்தப் பரிசைக் கொண்டு வந்தாய்?'' என்று கேட்டாள். ''நான் உன் பேத்தியை மணம் புரிந்து கொள்ள ஆசைப்படுகிறேன்!'' என்றார் கடவுள்! கிழவி உடனே கோபமுற்றுக் கடவுளை அடித்து விரட்டினாள். ''நான் உனக்கு என் பேத்தியைக் கொடுத்து விட்டால் அப்புறம் எனக்குத் துணை யார்?'' என்று கூறினாள்.

அகஸ்புரியா குஸோடா ஓடிப் போனார். ஆனால் அதன் பிறகு கிழவியின் பேத்தி மயக்கமுற்று விட்டாள். கண் விழிக்கவேயில்லை.

பயந்து போன கிழவி மதகுருவை அணுகினாள். அவர் யோசனை சொன்னார். ''கடவுளே ஒரு மானிடப் பெண்ணை மணக்க முன்வருவது பெரிய காரியம். நீ அதற்கு இசைய வேணும். நீ அவரை இனி காண முடியாது என்றாலும் அவர் சென்று மறைந்த 'பாதைக்குக் கல்யாணம்' செய்து கொடுத்துவிடு, உன் பேத்தியை'' என்றார். ''கிராமத்துக்கு வெளியே செல்லும் பாதையில் பந்தல் போட்டு, மணமகன் இல்லாமல் திருமணத்தை முடித்துவிடு. ஆனால் கடவுளையே மணமகனாக வைத்துத்தான் திருமண நிகழ்ச்சியை நடத்த வேணும்!''

முதியவள் அவர் கூறியபடியே, 'பாதைக் கல்யாணம்' தன் பேத்திக்கு முடிந்து வைத்தாள். மயக்கம் தெளிந்து அன்று முதல் அப்பெண் 'ஷாமன்' ஆனாள். நோயுற்றவர்களுக்கு உதவும் பணியில் ஈடுபட்டாள்! ஒரிஸ்ஸாவில் ஆதிவாசிகளிடையே 'பாதைக் கல்யாணம்' செய்து 'ஷாமன்' ஆகும் பழக்கம் இன்றும் காணலாம்.

ஆதாரம்: ஒரிஸ்ஸா பழங்குடிகளின் நம்பிக்கை.
தகவல்: பி. எஸ். எம்.

கொண்டிருக்கிறாராம்!'' என்று கந்தமாறன் குதூகலத்துடன் கூறினான்.

இந்தச் செய்தியினால் கரிகாலர் உற்சாகமடைவார் என்று எதிர்பார்த்ததில் அவன் பெரும் ஏமாற்றம் அடைந்தான். கரிகாலருடைய குரோதம் இப்போது வேறு திசையில் திரும்பியது.

"என்ன? என்ன? அருள்மொழி தஞ்சாவூரை நோக்கிப் போகிறானா? லட்சக்கணக்கான ஜனங்கள் புடை சூழப் போகிறானா? எதற்காக? வல்லவரையா! நீ என்ன சொன்னாய்? இப்போது நடப்பதென்ன? என்னுடைய கருத்தை அறிந்து கொள்ளும் வரையில் அருள்மொழி நாகைப்பட்டினத்திலேயே இருப்பான்என்று சொன்னாய் அல்லவா? இப்போது ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான்?....''

வந்தியத்தேவன் குறுக்கிட்டுப் பேசினான்: "ஐயா! இளையபிராட்டி அவ்வாறுதான் உறுதியாகக் கூறினார். அதற்குப் பின்னர் என்ன காரணம் நேர்ந்ததோ தெரியவில்லை. நான் வேணுமானால் போய்.....''

"ஆகா! நீயும் போய் விடுகிறேன் என்கிறாயே? நல்லது, நல்லது! எல்லாருமே என் விரோதிகள் ஆகிவிட்டீர்கள். உங்கள் சூழ்ச்சி யெல்லாம் எனக்குத் தெரிகிறது. அருள்மொழி ஏன் தஞ்சாவூரை நோக்கிப் போகிறான் என்று எனக்குத் தெரியும். அது அந்தக் கொடும்பாளூர்ப் பெரிய வேளானின் சூழ்ச்சி. அவனுடைய தம்பி மகளை என் சகோதரன் கழுத்தில் கட்டி அவர்களைச் சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்பது அக்கிழவனுடைய விருப்பம். கொடும்பாளூர் வேளானும் தென்திசைப் படையுடன் தஞ்சையை நோக்கி வருவதாகக் கேள்விப்பட்டேன். என் சகோதரி இளையபிராட்டியும் இந்தச் சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறாள். ஆமாம்; நீயுங்கூடத்தான்.......''

வந்தியத்தேவன் "இளவரசே! மன்னியுங்கள்! பொன்னியின் செல்வருக்காவது இளையபிராட்டிக்காவது அத்தகைய எண்ணம் சிறிதும் கிடையாது. இது சத்தியம். நான் வேணுமானால் போய் உண்மையை அறிந்து வருகிறேன்!'' என்றான்.

"ஆமாம்; நீயும் போய் அவர்களுடைய சூழ்ச்சியில் கலந்து கொள்கிறேன் என்கிறாய்! கந்தமாறா! இவனை உடனே பிடித்து... இந்த அரண்மனையில் கரங்கச் சிறை ஏதாவது இருந்தால் அதில் அடைத்து விடு!'' என்றதும் கந்தமாறன் வெகு குதூகலத்துடன் வந்தியத்தேவனை அணுகினான்.

உடனே கரிகாலர் தமது கட்டளையை மாற்றிக் கொண்டு, "வேண்டாம், வேண்டாம்! சோழர் குலத்தவர்கள் நீதி தவறாதவர்கள். குற்றம் நிச்சயமாகிறவரையில் தண்டிக்கமாட்டார்கள். வல்லவரையா! இனிமேல் இன்று முழுவதும் என் முகத்தில் விழிக்காதே! அது தான் உனக்குத் தண்டனை! உன்னைத் தஞ்சைக்கு அனுப்புகிறேனா, சிறைக்கு அனுப்புகிறேனா என்பதைப் பற்றி நாளைக்குச் சொல்கிறேன்! போ! போ! இனி ஒரு கணமும் இங்கே நில்லாதே! போய் விடு'' என்றார்.

கரிகாலருடைய முகத்தை அப்போது வந்தியத்தேவன் பார்த்தான். அவருடைய கடைக் கண்ணின் சமிக்ஞை, "இதெல்லாம் விளையாட்டு!'' என்று குறிப்பிடுவது போல் தோன்றியது. ஆயினும் உன்மத்தம் கொண்டிருந்த இளவரசர் பக்கத்தில் இல்லாமலிருப்பதே நல்லது என்று ஒரு நொடியில் தீர்மானித்துக்கொண்டு வந்தியத்தேவன், "ஐயா! தங்கள் சித்தம் என் பாக்கியம்!'' என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.

பின்னர் அன்று பிற்பகலில் இளவரசரின் கட்டளையின் பேரில் சம்புவரையரும் பார்த்திபேந்திரனும் திருக்கோவலூர்க் கிழாரை எதிர்கொண்டு அழைத்து வருவதற்காகப் போனார்கள் என்று வந்தியத்தேவன் தெரிந்து கொண்டான்.

இளவரசரும் கந்தமாறனும் நெடு நேரம் அந்தரங்கமாக வார்த்தையாடிக் கொண்டிருந்ததையும் அறிந்தான்.

இந்தச் சம்பவங்களெல்லாம் வந்தியத்தேவனுக்கு மிக்க மனச் சோர்வை உண்டாக்கியிருந்தன. மறுநாள் காலையில் இளவரசர் தனக்கு என்ன கட்டளை பிறப்பிப்பார்? தஞ்சாவூருக்குப் போகும்படி பணிப்பாரா? வழியில் பழையாறைக்குப் போகும்படியும் சொல்வாரா? சொன்னால் எவ்வளவு நன்றாயிருக்கும்? இந்தக் கடம்பூர் மாளிகை வாழ்வு அவனுக்குப் பிடிக்கவே யில்லை. இங்கே யாரும் உற்சாகமாக இருப்பதில்லை. இங்கே உள்ளவர்கள் எல்லாரும் எப்போதும் எதையோ பறி கொடுத்தவர்களைப் போலிருக்கிறார்கள். அஸ்தமித்து விட்டால் இந்த மாளிகை மனிதர்கள் வாழும் மாளிகையாகவே தோன்றவில்லை. பேய் பிசாசுகள் குடிகொண்டிருக்கும் பாழடைந்த மாளிகையாகத் தோன்றுகிறது. இங்கேயிருந்து எப்போது எப்படிக் கிளம்பப் போகிறோம்?

இப்படி வந்தியத் தேவன் எண்ணமிட்டபோது ஒரு பெண்ணின் குரல் "ஐயோ! பிசாசு!'' என்று அலறியது அவன் காதில் விழுந்தது. (தொடரும்)

போகுமிடமெல்லாம்
பொங்கிடும் அழகு
பொலிந்திட அணிவீர்...

# மபத்லால் சேலைகள்

மபத்லால் சேலைகள், சீராடும் பேரணி;
சிந்தை குளிர்த்திடும் பிரிண்ட்கள்;
விந்தை மிகுந்திடும் வண்ணங்கள்;
உன்னதமான காட்டன், 100%
போலியஸ்டர் மற்றும் கலவைத்
திருசுகள்!





# ராமாயணம் ராஜாஜி

## 87. "நாளை வா!"

அரண்மனைக்குள்ளிருந்த ராவணன் வானரர்களுடைய கோஷங்களையும் ஆரவாரத்தையும் கேட்டு ஆச்சரியப்பட்டான். பக்கத்திலிருந்த அரக்கர்களுக்குச் சொன்னான்: ''இதுவென்ன வியப்பாக இருக்கிறது! என்ன காரணம் இந்த வானரர்கள் இப்படிச் சந்தோஷப்படுவதற்கு? ராம லக்ஷ்மணர்கள் காயப்பட்டுப் பிரக்ஞை யற்றுக் கிடக்க இவர்கள் கவலைப்பட்டுக் கலவரப்பட வேண்டிய சமயத்தில் இப்படி உற்சாகமாகக் கூச்சலிடுவதன் காரணம் என்ன? ஏதோ விசேஷம் நடந்திருக்கிறது என்பது நிச்சயம். பார்த்து வாருங்கள்!'' என்றான்.

சில ராக்ஷசர்கள் மதிலின்மேல் ஏறிப் பார்த்து, ராவணனிடம் திரும்பி வந்து, பயந்து பயந்து சொன்னார்கள்: ''அரசனே! சுக்ரீவன் தலைமையில் வானர சேனை மிக உற்சாகமாகக் கோட்டையைத் தாக்குகிறது. ராம லக்ஷ்மணர்கள் உயிருடன் இருக்கிறார்கள். கட்டப்பட்ட யானைகள் கயிற்றை அறுத்துக்கொண்டு வெளியேறியமாதிரி ராமலக்ஷ்மணர்கள் தங்களைக் கட்டிய நாகபாசங்களை யெல்லாம் அறுத்துவிட்டுச் சேனையுடன் வந்திருக்கிறார்கள். இளஞ் சிங்கங்களைப் போல் திரிகிறார்கள். இந்திரஜித்து அவர்களைக் கட்டிய பாணங்கள் வீணாயின'' என்றார்கள்.

ராவணனுடைய முகம் வாடிற்று. கவலை கொண்டான். ''இதுவரையில் எவனும் இந்தப் பாணங்களிலின்று தப்பினது கிடையாது. நீங்கள் சொல்வது வியப்பாக இருக்கிறது. இந்தப் பாணங்களே வீணாயின என்றால் ஆபத்துத்தான்'' என்றான்.

பிறகு ரோஷம் மேலிட்டு, ''ஏய் தூம்ராக்ஷனே! நீ இருக்க நான் ஏன் கவலைப்பட வேண்டும்? வேண்டிய ஆட்களைக் கூட்டிக் கொண்டு உடனே போய் இவர்களை வதம் செய்து விட்டுத் திரும்புவாய்'' என்றான்.

தூம்ராக்ஷன் மகிழ்ச்சி யடைந்தான். தனக்கு இந்தக் கௌரவம் அரசன் தந்தானே என்று பெருமைப்பட்டுச் சேனையைக் கூட்டிக் கொண்டு புறப்பட்டான். கோட்டைக்கு வெளியே சென்று வானரர்களுடன் யுத்தம் செய்தான்.

ஹனுமான் தலைமையில் மேற்கு வாயிலைத் தாக்கிக் கொண்டிருந்த வானரர்களை எதிர்த்தான். அவ்விடம் நடந்த பெரும் யுத்தத்தில் இரு பக்கத்திலும் ஏராளமான உயிர்ச் சேதம் நேர்ந்தது. முடிவில் தூம்ராக்ஷன் மாருதியால் கொல்லப்பட்டான். அரக்கர்களில் சிதறியோடிக் கோட்டைக்குள் புகுந்து தப்பினவர்கள் தவிரப் பெருந் தொகையினர் மாண்டார்கள்.

இத் தோல்வியை அறிந்து இராவணனுக்கு அடங்காக் கோபம் மேலிட்டது. வாய் பதற வஜ்ரதம்ஷ்ட்ரனை நோக்கி,

''வீர சிகாமணியே, இனித் தாமதம் செய்வதற்கில்லை. உடனே போய் இந்த துஷ்டர்களை நிர்மூலம் செய்துவிட்டு வா!'' என்று உத்தரவிட்டான்.

வஜ்ரதம்ஷ்ட்ரனுடைய தலைமையில் ராக்ஷசர்கள் கோரமான யுத்தம் செய்தார்கள். எண்ணற்ற வானரர்கள் மாண்டனர். ஆயினும் வானர சேனை பின்வாங்கவில்லை. பாறைகளையும் மரங்களையும் பிடுங்கி எடுத்து வீசி எண்ணற்ற அரக்கர்களைக் கொன்றார்கள். இரு தரப்பிலும் தீவிர முறையில் யுத்தம் நடந்தது. முடிவில் அங்கதனுக்கும் அரக்கத் தலைவனுக்கும் கோர யுத்தம் நெடு நேரம் நடந்தது. வஜ்ரதம்ஷ்ட்ரன் கொல்லப்பட்டான். அரக்கர் சேனை சிதறி ஓடிற்று. அங்கதனைச் சூழ்ந்து கொண்டு வாவரர்கள் வீர கர்ஜனை செய்தார்கள்.

ராவணன் பிரஹஸ்தனைப் பார்த்து, ''யுத்தத்தில் நிபுணனாகிய அகம்பனனை பயங்கர ராக்ஷசர்களைப் பொறுக்கி அழைத்துச் சென்று இந்த வானரப் படையையும் ராமனையும் சுக்ரீவனையும் வதம் செய்து வரச் சொல்வாய். அகம்பனனுடைய வீரமும் சாமர்த்தியமும் வீண் போகாது'' என்றான்.

பிரஹஸ்தன் ராவணனுடைய உத்தரவுப்படி அகம்பனன் தலைமையில் சேனையை அனுப்பினான். அகம்பனன் தன் பெயருக்குத் தகுந்தபடியே, அசைக்க முடியாத யுத்த சாமர்த்தியம் பெற்றவன். ஆயுதங்கள் எடுத்துப் பெரும் படையுடன் சென்றான். கெட்ட நிமித்தங்கள் தோன்றின. இதை அவனாவது அவன் படையாவது கொஞ்சம் கூட லட்சியம் செய்யவில்லை. அரக்கர்கள் செய்த சிம்மநாதம் கடலைக் கலக்கிற்று.

பெரும் போர் நடந்தது. ரத்த வெள்ளம் ஓடிற்று. ஆகாயம் அளாவச் செந்தூள் கிளம்பிற்று. இருள் மூடிக் கொண்டது. இரு கட்சிகளிலும் கணக்கற்றவர்கள் மாண்டார்கள். வானர வீரர்களாகிய குமுதன், நளன், மயிந்தன், துவிவிதன் இவர்கள் அகம்பனனை எதிர்த்தார்கள். அகம்பனனும் மகா வீரத்துடன் அவர்களை எதிர்த்தான்.

வானர வீரர்கள் பலமாகத் தாக்கப்பட்டு ஓட ஆரம்பித்தார்கள். அப்போது ஹனுமான் வந்து சேர்ந்தான். அகம்பனன் சரமாரி பொழிந்தான். ஹனுமான் அதை லட்சியம் செய்யாமல் ஒரு பெரும் பாறையை எடுத்துக் கரகர வென்று சுழற்றி அகம்பனன் மேல் விட்டெறிந்தான். அரக்கன் தன் பாணங்களால் அதைத் தடுத்துப் பொடி செய்து விட்டான். ஹனுமான் தன் தேகத்தை வளர்த்துக் கொண்டு சூரியனைப் போல் கண் கூசும்படியாகப் பிரகாசித்தான். ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி, வீசி எறிந்து அரக்கனைக் கொன்றுவிட்டான். ராக்ஷசர்கள் பூகம்பத்தில் மரங்கள் அசைவது போல் நடுங்கி ஓடினார்கள். ஓடும்போது பின்னால் பார்த்துக் கொண்டே ஓடினார்கள். அரக்கர்களில் மாண்டவர்கள் போக எஞ்சியவர்கள் கோட்டைக்குள் புகுந்து தப்பினார்கள். ஹனுமானை வானரர்கள் எல்லாரும் கொண்டாடி ஆரவாரித்தார்கள்.

அகம்பனன் மாண்டதை அறிந்த ராவணன் முகம் சற்று வாடிற்று. கோபாவேசமாக யோசனை பண்ணினான். மறுபடியும் நகரத்தின் காப்பு நிலையைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திருப்தியடைந்து திரும்பினான். சேனாதிபதி பிரஹஸ்தனோடு கலந்து பேசினான்.

''இந்த வானர முற்றுகையை ஒழித்துக்கட்ட வேண்டும். சேனையுடன் வெளிச் சென்று பலமான யுத்தம் செய்து இவர்களுடைய தலைவர்களை வதம்செய்தால்தான் இது முடியும். நான், கும்பகர்ணன், நீ, இந்திரஜித்து, நிகும்பன் இந்த ஐவர்களுள் ஒருவர் இந்தப் பொறுப்பை ஏற்றுக் கொண்டு சேனையுடன் கோட்டையை விட்டுப் புறம் சென்று யுத்தம் செய்ய வேண்டும். இந்த வானரர்களைக் கண்டு நாம் இவ்வளவு பயப்படுவதா? நம்முடைய ராக்ஷசர்களின் கர்ஜனையைக் கேட்டாலே இந்தப் பிராணிகள் சிதறி ஓடும். யுத்த முறையில் அறிவும் பயிற்சியுமில்லாத இவர்களை ஓட்டுவது ஒரு கஷ்டமல்ல.''

பிரஹஸ்தன் இதைக் கேட்டு வினயமாகப் பேசலானான்:

''நாம் முன்பு எதிர்பார்த்தபடியே எல்லாம் நேர்ந்திருக்கிறது. சீதையைத் திருப்பித் தந்து விடுவதே சரியான முறை, க்ஷேமத்துக்கு வழி என்று நாம் முந்தியே சொன்னோம். நான் உமக்குக் கடன் பட்டிருக்கிறேன். என் பிராணன், பொருள், குடும்பம் அனைத்தையும் யுத்தத்தில் ஆஹுதியாகப் பெய்து எரித்து விடுவதற்குச் சம்மதம். நான் சேனையுடன் செல்கிறேன்'' என்றான்.

பெருஞ் சேனைக்கு உத்தரவிட்டான். எல்லாம் தயாராக இருந்தது. நகரத்தில் ஹோமம், சாந்தி, பிராம்மண பூஜை எல்லாம் நடத்தப்பட்டன. காற்றெல்லாம் பரிமளம் நிரம்பிற்று. பிறகு பேரிகை கோஷத்துடன் பிரஹஸ்தன் புறப்பட்டான்.

அவலக்ஷண சகுனங்கள் காணப்பட்டன. அவற்றைக் கவனியாமல் சென்றான். பிரஹஸ்தன் தலைமையில் பெருஞ் சேனை கோட்டையை விட்டுக் கிழக்கு வாயிலின் வழி வெளி வந்ததைக் கண்டதும் வானரர்கள் கர்ஜித்து யுத்தத்துக்கு சன்னத்தமானார்கள்.

நெருப்பில் பூச்சிகள் ஆவேசமாய் விழுவது போல் பிரஹஸ்தன் தலைமை

யில் ராக்ஷசர்கள் வானர சேனையின் மேல் பாய்ந்தார்கள்.

"அங்கே வருகிறானே பெருங் கூட்டத்துடன் அந்த ராக்ஷசன் யார்?'' என்றான் ராமன்.

''அவன்தான் பிரஹஸ்தன். ராவணனுடைய சேனாதிபதி. லங்கா சேனைகளில் மூன்றில் ஒரு பாகம் இவன் ஆதிக்கம்'' என்றான் விபீஷணன்.

பிறகு மலையும் மரமும் ஆயுதமாகக் கொண்ட வானரர்களுக்கும் சத்தி, சூலம், ஈட்டி, கோடாரி, தடிகள் முதலிய ஆயுதங்களை எடுத்து வந்த ராக்ஷசப் பெருஞ் சேனைக்கும் கோர யுத்தம் நடந்தது. கல் மாரியும் சரமாரியும் பொழிந்தும் கைகலந்தும் யுத்தம் செய்தார்கள். எண்ணற்ற வானரர்களும் அரக்கர்களும் மாண்டார்கள்.

பிரஹஸ்தனுடைய வீரர்களான நராந்தகன், மகாநாதன், கும்பஹனு முதலியவர்களைத் துவிவிதன், துர்முகன் ஜாம்பவான் ஆகிய வீரர்கள் எதிர்த்துக் கொன்றார்கள். அதன்மேல் பிரஹஸ்தனுக்கும் நீலனுக்கும் கடும் போர் வெகு நேரம் நடந்தது.

முடிவில் பிரஹஸ்தன் ஓர் இரும்பு உலக்கையை எடுத்துக் கொண்டு நீலன் மேல் பாய்ந்தான். உடனே நீலன் ஒரு பெரிய பாறையைப் பெயர்த்தெடுத்து பிரஹஸ்தன் தலையை நொறுக்கிவிட்டான். ராட்சத வீரர்கள் மூலைக்கு மூலை ஓடினார்கள். இவ்வாறு பெரும் வெற்றியடைந்த நீலன் ராம லக்ஷ்மணர்கள் இருந்த இடம் சென்று நமஸ்கரித்து நடந்த போரைப் பற்றிச் சொன்னான். ராம லக்ஷ்மணர்களும் நீலனுடைய சௌரியத்தை மிகவும்பாராட்டினார்கள்.

மகாபாரதம், ராமாயணம் இரண்டிலுமே யுத்த காண்டக் கதை கவர்ச்சியின்றி நீடித்து ஒரே விதச் சித்திரம் திரும்பத் திரும்ப வரும். அதை நான் சுருக்கமாகவே சொல்லி முடிக்கிறேன். ஆயினும் சொல்லில் சுருக்கமாகவே இருப்பதனால் யுத்தம் சுருக்கமாக முடிந்து விட்டதாக எண்ணக் கூடாது. ஆயுதங்களும் காயங்களும் ரத்தப் பிரவாகமும் உயிர்ச் சேதமும் ரகளையும் பிரம்மாண்டமாகத்தான் இருந்தன.

அக்னி புத்திரனான நீலன் பிரஹஸ்தனைக் கொன்றுவிட்டான் என்ற செய்தியை யுத்த களத்திலிருந்து சிதறி ஓடினவர்கள் அரக்க அரசனுக்குத் தெரிவித்தார்கள். அவனுடைய கோபம் பொங்கிக் கிளம்பிற்று. 'இந்திரனையும் அவன் தேவப் படையையும் ஜெயிக்க வல்ல என் சேனாதிபதி பிரஹஸ்தன் இந்த வானரர்களால் கொல்லப்பட்டான். இனி அலட்சியம் செய்வதற்கில்லை. இந்த ராம லக்ஷ்மணர்களையும் அவர்களுடைய குரங்குப் படையையும் நிர்மூலம் செய்துவிட வேண்டும்' என்று தானே தேர் ஏறிப் பூத கணங்களால் சூழப்பட்ட ருத்திரனைப் போல் சென்றான். தகதகவென்று ஜொலித்த தேரில் நகரத்தை விட்டு வெளியேறினதும் அலைகடலைப் போல் சப்தித்துக் கொண்டு நின்ற வானர சேனையைக் கண்டான்.

ராவணன் தலைமையில் அரக்கர் படை வந்ததைக் கண்டதும் வானரர்கள் கையில் மரங்களும் கற்பாறைகளுமாக ஆயத்தமாக நின்றார்கள். வந்த அரக்க வீரர்களைப் பற்றி விபீஷணன் ராமனுக்கு எடுத்துச் சொன்னான். 'அதோ அந்தத் தேரின் மேல் பால சூரியனைப் போல் பிரகாசிக்கிறானே அவனே இந்திரஜித்து' என்று. இவ்வாறு பலரைச் சொல்லி, 'அதோ அந்தப் பெருந் தேரில் சூரிய தேஜஸுடன் நிற்கும் தசமுகன் அவனே ராவணன்' என்றான். ராமனும் ராவணன் வடிவத்தையும் பிரகாசத்தையும் கண்டு வியந்தான். ''மகா வீரன், மகா பலவான் என்பதில் சந்தேகமில்லை. பாபியான இவனை ஒழிப்பேன்'' என்றான்.

ராவணன் பல வானரர்களைத் தாக்கி அவர்களை வீழ்த்தினான். நீலன் ராவணனைப் பலவாறு எதிர்த்து இம்சை செய்தான். ராவணனும் முடிவில் அவனை அக்னி அஸ்திரம் செலுத்தி நினைவு இழந்து விழச் செய்தான். ஹனுமான் ராவணனைப் பலமாக எதிர்த்தான். பிறகு பெரிய முஷ்டி யுத்தம் நடந்தது. ராவணன் அசையவில்லை. எதிர்த்த வானர வீரர்கள் ராவணனுடைய பாணங்களால் அடிபட்டுப் பிரக்ஞை இழந்து வீழ்ந்தார்கள்.

பிறகு லக்ஷ்மணனுக்கும் ராவணனுக்கும் போர் நடந்தது. லக்ஷ்மணனும் நினைவு அற்று விழுந்தான். இதைக் கண்ட ஹனுமான் இடையில் புகுந்து லக்ஷ்மணனை எடுத்து ராமனிடம் கொண்டு போய்ச் சேர்த்து விட்டான். பிறகு ராமனே ஹனுமானுடைய தோளின் மேல் ஏறி ராவணனுடன் யுத்தம் செய்தான். ராக்ஷசேந்திரன் பலமாகத் தாக்கப்பட்டு, கிரீடம் உடைந்து, தேரிழந்து, ஆயுதம் இழந்து ஒன்றும் செய்ய முடியாத நிலையில் நின்றான்.

''இன்று தப்பிப் போ. நன்றாகவே யுத்தம் செய்தாய். திரும்பிப் போய் இளைப்பாறி, நாளை ஆயுதம் எடுத்துக் கொண்டு மறுபடியும் வா'' என்று ராமசந்திரன் சொன்னான். ராவணனும் அவமானப்பட்டு நகரத்துக்குள் திரும்பிச் சென்றான். (தொடரும்)

இடுக்கண்
களைந்திடும் நட்பு போல்

# வலியைப்
# போக்கிடும்
# 'ஆஸ்ப்ரோ'



'ஆஸ்ப்ரோ' மட்டுமே மைக்ரோ:பைன் செய்யப்படுகிறது
அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக

நிகோலஸ் (N) தயாரிப்பு

# உயிரைக் கொடுத்த திருமகன்

ராஜாஜி

இது ஏசுபகவான் சரித்திரம். ஈசுவரனுக்கு உலக மக்கள் எல்லாம் அருமை மக்கள். எல்லா நாடுகளிலும் மக்களை மேல் தூக்க ஈசுவரனுடைய கிருபை பொழியும். நம் நாட்டில் கௌசல்யா தேவியின் வயிற்றில் தோன்றிய இராம சந்திரனும், தேவகியின் குழந்தையாகக் கண்ணனும் தோன்றியவாறு ஆசியா கண்டத்து மேற்குக் கோடியில் வசித்து வந்த யூதர்களை மேல் தூக்க மேரியம்மை யின் குழந்தையாக பகவான் ஏசு அவதரித்தான்.

நம்முடைய நாட்டில் தெய்வ வழிபாடானது சடங்குகளிலும் வெளி வேஷத்திலும் அகப்பட்டுக் கொண்டு ஸ்ரீ ஆசாரியன் அவதரிக்கும் வரையில் எவ்வாறு தத்தளித்ததோ அவ்வாறே யூதர்களின் தெய்வ வழிபாடும் அலைந்தது. இந்த நிலைமையைச் சீர்திருத்தி உண்மை பக்தியும், நன்னெறியும், உள்ளத் தூய்மையும் மக்களிடம் வளர பகவான் ஏசு அவதரித்து உபதேசித்தான். வைதிக ஆசாரங்களைக் காத்தால் போதாது. ஆண்டவனிடம் நாம் எதிர் பார்க்கும் கருணையை நாமும் பிற மக்களிடம் காட்ட வேண்டும், நம்முடைய குற்றங்களை ஆண்டவன் மன்னிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறோம் அல்லவா, அவ்வாறே பிறர் செய்கைகளினால் நாம் கஷ்ட நஷ்டம் அடைவதை நாமும் மன்னித்து, வெறுப்படைவதை விட்டுவிட்டு அன்பு செலுத்த வேண்டும் என்று பகவான் ஏசு யூதர்களுக்குப் போதித்தான். இதை வைதிக யூதர்கள் பொறுக்கவில்லை. இவன் யாரோ நமக்கிடையில் வந்து நம்முடைய புராதன ஆசாரத்தை யெல்லாம் கெடுக்கிறான், சடங்குகளும், ஆசார வழக்கங்களும் பெரிதல்ல என்று போதிக்கும் இவன் நம்முடைய குலத்துக்குத் துரோகி என்று ஏசுநாதனுக்கு மரண தண்டனை விதித்தார்கள். யூதர்களின் மரண தண்டனை முறை சிலுவையில் குற்றவாளியை ஆணிகள் அடித்துச் சாகும்வரையில் தொங்க வைப்பது. இந்தக் குரூர முறையில் பகவான் ஏசுவைக் கொன்றார்கள். மானிடனாக அவதரித்தபடியால் மனித உடல் வலியைத் தாங்க முடியாமல் ''அப்பனே! ஏன் என்னைக் கைவிட்டாய்?'' என்று உரக்கக் கதறி உயிரை நீத்தான்.

ஏசுநாதன் உபதேசித்த கருணை மார்க்கமானது அவதாரம் சிலுவையில் முடிந்ததும் மறைந்து போகவில்லை. உலகத்தில் மிகப் பெரிய சமயமாக உயிர் கொண்டு வளர்ந்து வருகிறது. எந்தச் சிலுவையில் ஏசு பகவான் உயிர் நீத்தானோ அந்தச் சிலுவையே புது மார்க்கத்தின் புனிதச் சின்னமாய் விளங்குகிறது.

ஈசுவரனுடைய வரம்பற்ற கருணையை ஈசுவரியாக வைத்து ஹிந்துக்களாகிய நாம் பக்தி செலுத்தி வழிபடுகிறோம் அல்லவா? அவ்வாறு ஏசு பக்தர்கள் ஏசுநாதனை ஈசுவரனுடைய அருமை மகனாக வைத்து வழிபடுகிறார்கள். ஆண்டவனைத் தியானித்து பூஜை செலுத்தும் போது பயம் வேண்டியதில்லை. அன்பு நிறைந்த தியானமாக இருக்கவேண்டும். இதற்காகத்தான் நாம் பிராட்டியைத் தியானித்து வழிபடுகிறோம். அவ்வாறே கிறிஸ்துவர்கள் ஏசுவை ஆண்டவனுடைய அன்புக்குரிய மகனாக வைத்து நம்முடைய குற்றங் குறைகளை யெல்லாம் மன்னிக்கும் நிர்மல கருணாமூர்த்தியாகத் தியானித்து வழிபடுகிறார்கள். செய்துவிட்ட பாபங்களை எண்ணி வருந்தித் துயரப்பட்டு பகவானைச் சரண் அடைந்தால் பாபங்கள் நீங்கிப் போகும், குற்றம் செய்தவர்களைக் கோபிக்காமல் அறியாமல் செய்தார்கள் என்று அவர்களை மன்னித்துவிட வேண்டும், வெறுப்படையாமல் அவர்கள்பால் இரக்கம் கொள்ள வேண்டும். இது ஏசு பகவானின் உபதேசம்.

நீசர்களோடும், கெட்டுப் போனவர்களுடன் உண்பதும் பேசுவதுமாக இருக்கிறான் இவன் என்று வைதிக யூதர்கள் ஆட்சேபித்தார்கள். வியாதியில் சிக்கியவர்களைத்தானே வைத்தியன் பார்க்க வேண்டும். இவர்களைப் பாபத்தினின்று விடுவிக்க வேண்டுமல்லவா நான்? ஆனபடியால் அவர்களுடன் சிநேகமாக இருக்கிறேன் என்றான். அன்பினாலே தான் அவர்களை நல்வழிக்குத் திருப்ப வேண்டும், செய்துவிட்ட பாபங்களுக்கு இரங்கச் செய்ய வேண்டும். இது ஏசு பகவான் யூத வைதிகர்களுக்குத் தந்த விடை. 'மற்ற வழிகளில் பயனில்லை, நீயே கதி என்று என்னைச் சரண் அடை, எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுவாய், கவலைப்படாதே' என்று கண்ணன் கீதை இறுதியில் வாக்குத் தந்ததும் பகவான் ஏசுநாதன் உபதேசமும் ஒன்றே. ஹிந்து சமயாச்சாரியர்களின் பாகுபாட்டின்படி ஏசுபகவானுடைய உபதேசம், சரணாகதியும் பக்தி மார்க்கமும் சுத்த த்வைதமுமாகும்.

புதுமை!

ஸிந்தெல் வானிஷிங் கிரீம் தருகின்ற சீதனம்,

செழித்து சிரிக்கின்ற ரோஜாவின் மலர்வதனம்

Cinthelle

கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம் ஸிந்தெல், உங்கள் வதனத்திற்கு புத்தம்புது ரோஜா மலரின் மெருகேற்றி, எழிலோங்கச் செய்கிறது. சருமத்தில் போட்டதே தெரியாமல் கரைந்து மறைந்து, பட்டுப் போன்ற பளபளப்பை மட்டும் ஒளிவிடச் செய்கிறது ஸிந்தெல்.

ஸிந்தெல், சருமத்தின் இயற்கையான ஈரத்தன்மையை நிலை நிறுத்தி, நாள் முழுவதும் நலியாத புதுமைச் சிலிர்ப்பினை அளிக்கிறது. அழகுப் படிமானமாகவோ, அப்படியேவோ உபயோகிக்கும்போது, ஸிந்தெல் தரும் தூய ரோஜா சுகந்தம் உங்களைக் கவர்ச்சிக் கன்னியாகக் கனியவைக்கிறது.

**கொஞ்சிடும் அழகு மிஞ்சிட—ஸிந்தெல்**
**கோத்ரேஜின் புதிய வானிஷிங் கிரீம்.**

Godrej

ULKA-GSC-2 TAM



# பாவ புண்ணியங்கள்



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சார்ய சுவாமிகள் அருளுரை

இந்த உலகில் நாம் எவருமே பாவியாக இருக்க விரும்பவில்லை; ஆனால் பாவ காரியமே அதிகம் செய்கிறோம். நாம் எல்லோருமே புண்ணிய பயன் பெறத்தான் விரும்புகிறோம்; ஆனால் புண்ணிய காரியங்களைச் செய்வதில்லை.

''பாவம் செய்ய யாருமே விரும்பவில்லை. ஆனாலும், கிருஷ்ணா! அவனை எதுவோ பாபத்திலேயே பலாத்காரமாகத் தூண்டிக் கொண்டிருக்கிறதே! அது என்ன?'' என்று அர்ஜுனன் பகவானைக் கேட்டான்.

''அதுதானடா அப்பா, ஆசை ஆசை என்பது'' என்று பகவான் பதில் சொன்னார்.

ஆசையினால் ஒன்றை அடைய முயல்கிறோம். எப்படியாவது அதை அடைந்துவிட வேண்டும் என்பதால் தர்ம — அதர்மங்களைப் புறக்கணித்து விடுகிறோம். அந்த ஆசை நிறைவேறி விட்டால் அதோடு திருப்தி உண்டாகிறதா? இல்லை. அக்னியில் நெய்யை விட்டால் அது அணைந்தா போகிறது? மேலும் பெரிதாக வளர்கிறது. அப்படியே ஓர் ஆசை பூர்த்தியானவுடன் மனசில் இன்னோர் ஆசை பெரிதாக முளைக்கிறது.

சரி, அப்படியானால் ஆசை நிறைவேறாவிட்டாலே நல்லது என்று சொல்லவா? அப்படியும் இல்லை. ஆசை நிறைவேறாவிட்டால் நமக்கு ஆத்திரம் உண்டாகிறது. சுவரில் எறிந்த ரப்பர் பந்து திரும்புவது போல், நிறைவேறாத ஆசையானது கோபமாகத் திரும்பி வந்து நம்மைப் பாபத்தில் தூண்டுகிறது.

அப்படியானால் பாபம் செய்யாதிருப்பதற்கு ஒரே வழி ஆசைகளை அழிப்பதுதான். நாம் காரியம் செய்யாமல் இருக்க முடியாது. ஆனாலும் ஆசையில்லாமல் காரியம் செய்யப் பழக வேண்டும். ஆசையில்லாமல் செய்வதுதான் புண்ணிய காரியம்.

நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியம்; வாயால் புரளிப் பேச்சும் அசத்தியமும்; மனத்தினால் கெட்ட நினைவுகள்; பணத்தினால் செய்கிற பாவத்தைச் சொல்லவே வேண்டாம்.

எந்த நான்கால் பாவம் செய்தோமோ, அந்த நான்காலுமே புண்ணியம் செய்யப் பழக வேண்டும்.

உடம்பைப் பரோபகாரம், பகவானைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிப்பது இவற்றில் ஈடுபடுத்திப் புண்ணியம் செய்ய வேண்டும்.

வாயால் பகவந் நாமாவைச் சொல்லிப் புண்ணியம் செய்ய வேண்டும். 'சம்பாதிப்பதிலேயே பொழுதெல்லாம் போய் விடுகிறது; இதற்கு அவகாசம் இல்லையே' என்பீர்கள். சம்பாதிப்பது கிரகஸ்தர்களுக்கு அவசியம்தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழுது முழுதும் போய்விடவில்லை என்று தெரியும். வீண் பேச்சு, பரிகாசம், வேடிக்கை பார்ப்பது, நியூஸ் பேப்பர் விமரிசனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது? அதையெல்லாம் பகவந்நாம ஸ்மரணையில் செலவிடலாமே! இதற்குத் தனியே பொழுது ஏற்படுத்திக்கொள்ள முடியாவிட்டாலும் பரவாயில்லை. காரியாலயத்துக்கும் பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவந்நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே! ஓடி ஓடிச் சம்பாதித்ததில் ஒரு பைசாக் கூடப் பிற்பாடு உடன் வராதே! மறு உலகத்தில் செலாவணி பகவந்நாமா ஒன்றுதானே?

மனம் பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கி யிருக்கிறோம். அதை மெழுகிச் சுத்தப்படுத்தி பகவானை அமர வைத்து நாமும் அமைதியாக அமர்ந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிஷங்களாவது இப்படி தியானம் செய்ய வேண்டும். லோகமே முழுகிப் போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் இது. ஏனெனில், லோகம் முழுகும் போது நமக்குக் கைகொடுப்பது இதுவே!

பணத்தைக் கொண்டு பகவானுக்காகவும் ஏழைகளுக்காகவும் பலவிதங்களில் தர்மம் செய்து புண்ணியம் சேர்க்க வேண்டும்.

பாபத்துக்கு இரண்டு சக்திகள். ஒன்று, இன்று இப்போது நம்மைத் தவற்றில் ஈடுபடுத்துவது. இரண்டாவது, நாளைக்கும் இதே தவற்றை நாம் செய்யுமாறு தூண்டுவது. உதாரணமாகப் பொடி போடுவது அன்றைக்குக் கெடுதல் செய்கிறது; அதோடு நில்லாமல் நாளைக்குப் பொடி போடவும் தூண்டுகிறது. இதுதான் பழக்க வாசனை என்பது. இந்த வாசனையை மங்க வைத்து, புண்ணியங்களைச் செய்து செய்து புண்ணிய வாசனையை ஏற்ற வேண்டும்.

வாசனைதான் மீண்டும் மீண்டும் பாவத்தில் நம்மை இழுக்கிறது. அதற்காகப் பயம் வேண்டாம். நம்மைப் போல் இருந்தவர்கள் — நம்மைவிட மகா பாவிகளானவர்கள்கூட — பக்தர்களாகவும், ஞானிகளாகவும் ஆகியிருக்கிறார்கள். பாவிகளை ரட்சிக்காவிட்டால் ஈசுவரனுக்குத்தான் என்ன பெருமை? நாம் பாவியாக இருப்பதாலேதான் அவனுக்குப் பதிதபாவனன் என்ற விருது கிடைக்கிறது.

''நான் உன்னை எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுவிக்கிறேன். பயப்படாதே'' என்று தீர்மானமாக அபய வாக்குத் தருகிறார் ஸ்ரீ கிருஷ்ணன்.

அதனால் நாம் தைரியமாக இருப்போம். எத்தனை சுற்றுச் சுற்றினோமோ அத்தனையும் திருப்பிச் சுற்றித்தான் ஆகவேண்டும், பாப வாசனை அவ்வளவும் தீர அத்தனை புண்ணிய வாசனை உண்டாக வேண்டும். நடுவே அவசரமும் ஆத்திரமும் வேண்டாம். அப்படிச் செய்தால் சுற்று சிக்கலாகிவிடும். பொறுமையாகப் பகவானை நம்பி தர்மத்தைச் செய்தால் நிச்சயம் கைகொடுப்பான்.





# சுழிக்காற்று

கௌசிகன்

## அத்தியாயம் ஒன்பது

காவேரியின் குழப்பம் நிர்மலா சேகர் இவர்களிடையே ஒருவிதச் சலனத்தை உண்டாக்கியது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டாலும் தங்கள் கருத்தை வார்த்தைகளாக்கி வழிய விடவில்லை. மௌனமாகச் சாப்பிடுவது மஞ்சுளாவுக்குப் பழக்கமில்லாத ஒன்று. ''சேகர், சமீபத்தில் எங்கள் பண்ணையில் நிகழ்ந்திருக்கும் சில விஷயங்களை நினைக்கும்போது எனக்கு ஒரே திகைப்பாகத்தான் இருக்கிறது'' என்று பேச்சைத் தொடங்கினாள் மஞ்சு. அவள் பேச்சு கோகிலாவின் உடலில் ஒரு மின்சாரத் தாக்குதலை உண்டாக்கியதைக் குனிந்த நிலையிலேயே ஓரக் கண்ணால் கவனித்தான் சேகர். 'எந்த விஷயங்கள்?' என்று வினவும் பாவனையில் சேகர் மஞ்சுளாவைப் பார்த்தான்.

''ராமுவின் மறைவைத்தான் குறிப்பிடுகிறேன், சேகர். இந்தப் பண்ணையில் என் தாத்தாவின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாக இருந்த அவன் திரும்பி வருவான் என்று நம்பிக் கொண்டிருக்கிறாள் நிர்மலா. பாவம், ஆனால் எனக்கென்னவோ அவன் திரும்பி வராதபடி மறைந்து விட்டான் என்றுதான் தோன்றுகிறது. அதாவது அவன் இறந்து போயிருக்க வேண்டும்'' என்றாள் மஞ்சுளா.

''இறந்து போயிருப்பான் என்றா எண்ணுகிறாய்?'' இடைமறித்துப் பேசிய கோகிலா, ''எனக்குத் தோன்றவில்லை'' என்றாள் வறுவலைத் தின்று கொண்டே.

இத்தனை நேரம் இந்தச் சம்பாஷணை எதிலும் கலந்து கொள்ளாமல் சாப்பாட்டிலேயே கவனமாக இருந்த கோபால் சட்டென்று தலை நிமிர்ந்து, ''அது என்னது?'' என்றான் புருவத்தைச் சுருக்கி எதையோ உன்னிப்பாக உற்றுக் கேட்டபடியே.

''ஆந்தை சத்தமிடுவது போலிருக்கிறது. தோப்பில் அதன் நடமாட்டம் உண்டு'' என்றாள் கோகிலா.

ஆனால் இந்தத் தடவை சேகர் அசட்டையாக இருக்கவில்லை. சட்டென்று எழுந்திருந்தான். ''ஆந்தையின் அலறல் அல்ல அது. யாரோ ஓர் அபலையின் ஓலமாக இருக்க வேண்டுமென்று சந்தேகிக்கிறேன்.'' சொல்லிக் கொண்டே கையை உதறிவிட்டு எழுந்திருந்தவன் அருகிலே இருந்த 'வாஷ் பேஸி'னில் கையைக் கழுவிக் கொண்டான். அடுத்த விநாடி நாற்காலியில் சாத்தியிருந்த ஊன்றுகோலை அவன் கைகள் உறுதியாகப் பற்றிக் கொள்ளவே அவன் கால்கள் வேகமாக ஆனால் உறுதியுடன் வாசல் கதவை நோக்கி

நகர்ந்தன. கோபாலும் மஞ்சுளாவும் கூடக் கைகளைக் கழுவிக்கொண்டு அவனைத் தொடர்ந்தார்கள். பர்மாத் தேக்கினால் ஆன உறுதியும் கம்பீரமும் கொண்ட, இரண்டாகப் பிரிந்து பொருந்தி இருந்த அந்தப் பெரிய தலைவாசல் கதவைத் தன் இரு கரங்களாலும் பனிச் சென்று விரியத் திறந்து விட்டு நின்றான் சேகர். அவன் ஒரு பக்கத்தில் கோபாலும், மறு பக்கத்தில் மஞ்சுளாவும் வந்து நின்று கொண்டார்கள். அவன் கையிலிருந்த டார்ச் விளக்கு வெள்ளித் தகடு போன்ற ஒளி அலையைப் பரப்பிக் கொண்டிருந்தது. பீதியுடனும் பதைப்புடனும் ஓர் ஓரமாகக் காவேரி பதுங்கிக் கொண்டு நடுக்கத்துடன் இருள்வெளியை எட்டிப் பார்த்தாள். நிதானமாக எழுந்து வந்த



கோகிலா, வராந்தாவின் விளக்குகளுக்கான ஒரு மின் விசையை அழுத்தினாள். இரண்டு விளக்குகள் பளிச் சென்று எரிந்து இருளை அகற்றின.

ஒளி படர்ந்ததும் சேகர், ''அந்தப் பக்கத்திலிருந்து தான்'' என்று சுட்டிக் காட்டினான்.

''காதில் விழுந்ததா?'' கலவரமுடன் குரல் மாறக் கேட்டாள் மஞ்சுளா.... ''யாரோ ஓடுவது போல் இல்லை...?''

தொலைவிலுள்ள ஏதோ சில செடிகள் வேகமாகக் குலுங்கும் சலசல ஒலி தெளிவாகக் கேட்டது.

''யாரோ இரண்டு பேர். ஓடும் ஒருவரை

மற்றவர் துரத்துகிறார்'' என்றான் சேகர். மஞ்சுளா தனது டார்ச் விளக்கு உமிழும் ஒளியை இங்கும் அங்கும் திருப்பி இருள் மூட்டத்தை விலக்கிக் கொண்டு முன்னே நகர்ந்தாள். அவளைத் தொடர்ந்து நடந்த சேகர் சட்டென்று நின்றான். அவனது வலக் கரம் முன்னே செல்லும் மஞ்சுளாவின் கையை இறுகப் பற்றி நிறுத்தியது. இதனால் இவர்களைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த கோபால் சேகரின் மீது மோதிக் கொண்டு நிற்கும்படியாயிற்று.

'' அதோ, அங்கே....?'' என்றான் சேகர் மெல்லிய குரலில்.

''ஆமாம், நன்றாகக் கேட்கிறதே, அந்த முனகல்!'' என்ற மஞ்சுளா அவன் பார்வை பதிந்த இடத்தில் தன் கைவிளக்கின் ஒளியைத் திருப்பினாள்.

அவர்கள் நின்று கொண்டிருந்த இடத்திலிருந்து இருபது அடிகளுக்கு அப்பால் அவள் தோழி நர்ஸ் நிர்மலா, ஒரு மரத்தின் அடியில், பீதியால் அதன் அடிப்பாகத்தோடு அப்பிக் கொண்டு கருண்டு கிடந்தாள். மஞ்சுளா திருப்பிய டார்ச் விளக்கின் ஒளி அவள் பார்வையைக் கூச வைத்துக் குருடாக்கி முகத்தைத் திருப்பியது. அந்த ஒளியில் அவள் முகத்தில் பளபளத்த ரத்தக் கறை நன்றாகத் தெரிந்தது. ஒரு கன்னத்தின் குறுக்கே நெளிந்து ஓடியிருந்தது ரத்தக் கீற்று. இடக் கண்ணின் மேலிருந்த காயத்திலிருந்து வழிந்திருந்த ரத்தக் கறைதான் அது. உடலோடு ஒட்டினாற் போல் இறுக்கமாக அணிந்திருந்த அவளது வெள்ளை நர்ஸ் உடை பலவந்தமாகப் பரக்கென்று கிழிக்கப்பட்டிருந்தது. கிழிந்து தொங்கிய அந்த வெள்ளை உடையில் சில ரத்தச் சொட்டுக்கள் விழுந்து பரவிப் பளிச்சென்று தெரிந்தன.

'' நிர்மலா....!'' மஞ்சுளா கத்திவிட்டாள். அந்தக் குரலைக் கேட்ட நிர்மலா, சுருண்டு ஒடுங்கிக் கிடந்தவள் குபீரென்று எழுந்தாள். குரல் வந்த திசையை நோக்கித் தாவினாள். தாங்கிக் கொண்ட மஞ்சுளாவின் கைகளுக்குள் முடங்கிய நிர்மலாவின் உடல் நடுங்கியது. பீதியினால் மூச்சை அடக்கிக் கொண்டிருந்த அவளிடமிருந்து இப்போது விம்மல்களாக அழுகை வெடித்து வெளிப்பட்டது. மஞ்சுளாவுக்கு மூச்சுத் திணறும்படி அத்தனை இறுக்கமாக அவளைக் கட்டிக் கொண்டாள் நிர்மலா.

''நான்தான் மஞ்சுளா, மஞ்சுளாவே தான். இனி நீ பயப்படவே தேவையில்லை நிர்மலா! உனக்கு உதவவே நாங்கள் வந்துள்ளோம்'' என்றாள் மஞ்சுளா, அவளை ஆதரவுடன் அணைத்துக் கொண்டே. அவளது விம்மல்களையும் மீறிக் கொண்டு ஏதோ வார்த்தைகளும் வெளிப்பட்டன, நிர்மலாவிடமிருந்து. ஆனால் சட்டென்று அவள் அமைதியானாள். அடுத்த விநாடி மஞ்சுளாவின் கரங்களில் நிர்மலா நினைவிழந்து துவண்டு கிடந்தாள். தவித்துப் போன மஞ்சுளா கலவரத்துடன் சேகரின் கையிலிருந்து ஒளியிட்டுக் கொண்டிருந்த டார்ச் ஒளியின் மங்கலான நிழலில் சேகரின் முகத்தை நோக்கினாள்.

''நிர்மலா கூறியது உங்களுக்கு விளங்கிற்றா, சேகர்?'' மஞ்சுளா கேட்டாள். அவன் பதில் சொல்லவில்லை. அவளே கூறினாள். '''அவன் அவளுடைய உடைகளையெல்லாம் களைந்துவிட்டான். அவள் கொஞ்சமும் வெட்கமில்லாமல்...' இன்னும் ஏதோ சொல்லத்தான் அவள் முயற்சி செய்தாள்....''

''அதுவேதான் 'அவன் அவள் உடைகளையெல்லாம் களைந்து விட்டான்.' யாருடைய உடைகளை? வெட்கங்கெட்ட அவள் யார்?.... புரியாத புதிர்....ம்..... அவளை அந்த நிலையிலேயே வைத்துக் கொள் மஞ்சுளா! உனக்கு முதல் உதவி முறைகள் நினைவு இருக்கிறதில்லையா? நெற்றிப் பொட்டுக்கு அருகிலுள்ள வெட்டு வாயில் விரல்களை வைத்து அழுத்தி ரத்தப் பெருக்கைக் கட்டுப்படுத்து'' என்று கூறிய சேகர், ''கோபால்!'' என்று குரல் கொடுத்தான்.

''இதோ, இங்குதான் இருக்கிறேன், சேகர்'' என்று கூறியபடியே முன்னால் ஓடி வந்து, ''இந்தப் பெண்ணை இந்த நிலைக்கு ஆளாக்கிய அயோக்கியனை இப்போதே கண்டுபிடித்து....'' என்று படபடத்தான், கோபால்.

''இல்லை, கோபால்! இப்போது அது முடியாது'' என்று தன் கையில் ஒளி குன்றிப் போயிருந்த பிளாஷ் லைட்டை அவன் கையில் திணித்தான் சேகர். சக்தி இழந்த அது ஒரு கங்கு போலப் பளபளத்தது. வெளிச்சம் தரவில்லை. ''இதன் உதவியால் உன் வழியை அறிந்து பங்களாவுக்குச் சென்று, வேறு புதிய பாட்டரி விளக்கைக் கேட்டு வாங்கி வா. அல்லது இதற்குப் புதிய 'செல்' இருக்குமானால் வாங்கிப் போட்டுக் கொண்டு வா. நீ வரும் வரையில் நாங்கள் இங்கேயே உனக்காகக் காத்திருக்கிறோம்.''

'' இதோ ஒரு நொடியில் திரும்புகிறேன்'' என்று அவர்களிடமிருந்து வேகமாக நடந்தான் கோபால்.

'' சேகர், நிர்மலாவின் காயத்திலிருந்து ரத்தம் ஒழுகுவது நின்றுவிட்





டது. மயக்கத்திலிருந்தும் விரைவிலேயே விடுபட்டு விடுவாள் என்று நினைக்கிறேன்.'' — மஞ்சுளாவின் குரல் இருளில் ஒலித்தது.

''காயத்தைவிடப் பயமும் பீதியுமே அவளை அதிகமாகப் பாதித்திருக்கின்றன. எங்கே தன் உயிருக்கே அபாயம் நேரிடுமோ என்ற நடுக்கமே இந்த மயக்கத்துக்குக் காரணம்'' என்றான் சேகர்.

அந்தச் சமயத்தில் மரங்களும், செடிகளும் செறிந்த அந்தப் பண்ணையின் தோப்பினுள் எங்கோ செடிகளை விலக்கி வழி உண்டாக்கும் சலசலப்பு ஸ்பஷ்டமாகக் கேட்டது. நிர்மலாவைத் தாக்கியவன் இன்னும் அங்கே எங்கோ அருகில்தான் அவளுக்காகக் காத்திருக்கிறான் என்பதை அந்தச் சப்தம் உறுதியாக்கியது. சில விநாடிகள் நிசப்தத்துக்குப் பிறகு அந்தச் சலசலப்பு மறுபடியும் கேட்டது. இப்போது அது தன்னை நோக்கி நகர்ந்து வருவதாகவும் உணர்ந்தான் சேகர். கைப் பிரம்பில் அவன் பிடி உறுதியாக இறுகிற்று. மௌனமாக அந்த ஓசை வரும் திசை நோக்கி நடக்கலானான் சேகர்.

தான் அங்கேயே நிற்பது நிர்மலாவுக்கும் மஞ்சுளாவுக்கும் ஆபத்தைப் பகிர்ந்து கொடுப்பது போலாகும் என்பதை உணர்ந்தே அந்த ஓசைக்கும் அவர்களுக்கும் இடையே தான் இருப்பதே நல்லது என்ற முடிவுடனேயே மஞ்சுளாவுக்கும் அதை அறிவிக்காமல் மௌனமாக நடந்தான். நடைபாதையிலிருந்து புல்வெளிக்கு வந்துவிட்டோம் என்பதைக் காலடிகள் உணர்த்தின. இருளில் நிதானமாக முன்னேறிக் கொண்டிருந்த அவனை அந்தச் சலசலப்பு ஒலி இன்னும் மேலே மேலே இருளின் நடு மையத்துக்கே அழைத்துச் சென்று கொண்டிருந்தது. ஒரு நிலையில் ஓர் இடத்தில் திடீரென்று அவன் பாதங்கள் தரையில் பாவவில்லை. நிதானம் இழந்தான். கைகள் வெற்று வெளியைத் துழாவின, பற்றுக் கோடின்றி. பயனற்ற நிலையில் பொத்தென்று ஏதோ குழிக்குள் விழுந்தான் சேகர்.

விழுந்தவன் சுதாரித்துக் கொண்டு தன் பயனற்ற ஒரு காலுக்குக் கைகளின் உதவியை அளித்துச் சிரமப்பட்டு எழுந்து நின்ற அதே சமயத்தில் அவன் தலைக்கு மேலே மூங்கில் பாலத்தின் மீது ஓடும் தடதட வென்ற காலடிகளின் ஓசை கேட்டது. அதைத் தொடர்ந்து நிர்மலாவும் மஞ்சுளாவும் இருந்த திசையில் செடிகள் அலைபடும் அரவமும் கேட்டது. அத்துடன், மஞ்சுளாவின், ''சேகர்... சேகர்....'' என்ற தீனமான அலறலும் எழுந்து சட்டென்று அடங்கியது.

விழுந்த நிலையிலும் சேகரின் கைப்பிடி தன் ஆதிக்கத்திலிருந்து ஊன்றுகோலை விட்டுவிட வில்லை. மடங்கிச் சரிந்திருந்த உணர்வற்ற ஒரு குதிகாலை ஊன்றுகோலின் பலத்தினால் நிமிர்த்தி எழுந்து நின்ற சேகரின் கண்கள் தன் சுற்றுப்புறத்தை அந்த இருளிலும் ஆராய்ந்தன. மழைக் காலத்தில் நீர் ஓடுவதற்காக வெட்டப்பட்டதொரு வாய்க்கால் பள்ளம் அது. காட்டுச் செடி கொடிகள் மண்டிப் புதராகக் கிடந்தது. அதைத் தாண்டிச் செல்ல, தான் விழுந்த இடத்துக்கு அருகிலேயே ஒரு மூங்கில் பாலமும் இருக்க வேண்டும் என்பதை ஊகித்துணர்ந்தான் அவன். அந்தப் பள்ளத்திலிருந்து எப்படி ஏறலாம் என்று தன் ஊன்றுகோலால் அதன் பக்கங்களைக் குத்திப் பார்த்துக் கொண்டிருந்த போது பிரகாசமானதோர் ஒளி இங்குமங்குமாக அசைந்தபடி அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அது கோபால்தான்.... ''சேகர்... மஞ்சுளா...!'' என்று தவிப்புடன் கூவிக் கொண்டே ஓட்டமும், நடையுமாக வந்து கொண்டிருந்தான் அவன்.

''மஞ்சுளாவைப் பார்த்தாயா,— கோபால்?'' குரல் கொடுத்தான் சேகர், குழியிலிருந்தபடியே. சட்டென்று குரல் வந்த திசையில் விளக்கின் ஒளிப் பாதை திரும்பியது. அந்த ஒளியின் உதவியால் சேகர் சட்டென்று தான் விழுந்திருந்த பள்ளத்திலிருந்து மேலேறினான். கோபாலிடமிருந்த விளக்கின் உதவியால் இருவரும் வேகமாக மஞ்சுளாவை

# நல்ல தேநீர் ரசிக்கப்படும்
# எல்லா இடங்களிலும் —
# குடும்பங்கள் விரும்பி வாங்குவது
# லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

குடும்பத்திலுள்ள
ஒவ்வொருவரும்
விரும்பி அருந்தும் டீ
இதுவே.
விருந்தினர்களும்
அவ்வாறே.
லிப்டன் ஹிமாலயன்
கோல்டன் டஸ்ட்
திருப்தியளிக்கும்
மணமுள்ள சத்து
நிறைந்த, ருசிமிக்க
கெட்டியான பானம்.
ஒவ்வொரு பாக்
கெட்டிலும் அதிக
அளவு கோப்பைகள்
கிடைக்கின்றன.
லிப்டன் ஹிமாலயன்
கோல்டன் டஸ்ட்
உங்கள் குடும்பத்தார்
அருந்தி மகிழ்வது.
விருந்தினர்கள்
விரும்பி அருந்துவது.

HIMALAYAN
GOLDEN DUST TEA
LIPTON'S
FINEST
GOLDEN DUST TEA

LHCC-19 TAM

பாக்கிங் செய்த தேயிலை
மட்டுமே புதிதாகவும்,
மணத்துடனும்
திகழ்கிறது.

**லிப்டன் என்றாலே**
**நல்ல டீ**






அடுத்த நாவல்: மேஜர்

விட்டு வந்த இடத்துக்கு விரைந்தார்கள். பளீரிட்ட ஒளி வெள்ளத்தில் செடிகளின் மறைவிலிருந்து துவண்ட இரண்டு கைகள் மட்டும் புல் தரையில் தொய்ந்த நிலையில் தெரிந்தன. டார்ச் விளக்கைச் சேகரின் கைகளில் திணித்துவிட்டுச் சட்டென்று மண்டியிட்டுக் குனிந்த கோபால் அந்த வெளுத்த கைகளுக்கு உரிய உருவத்தைக் காணச் செடிகளை விலக்கினான். அது மஞ்சுளா! சேகர் தனது கையிலிருந்த விளக்கின் ஒளியினால் அந்தச் சுற்றுச் சூழலைத் துழாவிக் கொண்டிருந்தான். நிர்மலா இருப்பதற்கான அடையாளம் எதுவுமே அங்கு காணப்படவில்லை. நிர்மலா மாயமாக மறைந்து போயிருந்தாள். மஞ்சுளா மட்டுமே அந்தப் புல் தரையில் அசைவற்றுக் கிடந்தாள், உணர்வற்ற நிலையில்.

அந்த நிலையில் மஞ்சுளாவை அப்படிப் பார்த்த கோபாலின் முகம் வெளுத்து விட்டது. பூப்போன்ற அந்த உடலை நலுங்காமல் தூக்கிக் கொண்டு எழுந்தான். "பலமாகத் தலையில் அடித்து வீழ்த்தியிருக்கிறார்கள். பொறி கலங்கி மூர்ச்சையடைந்திருக்கிறாள்.... வேறு அபாயம் ஏதுமில்லை" என்று அவன் முகத்தின் மீது பரவிய ஒளியைக் கொண்டு ஊகித்துக்கூறினான் கோபால்.

"மெள்ள, நான் வேண்டுமானால் ஒரு கை தரட்டுமா?" என்று கேட்டான் சேகர்.

"வேண்டாம்.... உன் காதலி அப்படியொன்றும் கனமானவளில்லை. நீ முன்னால் வழி காட்டிக் கொண்டு மெள்ளப்போ. நான் அவளைத் தூக்கிக் கொண்டு வருகிறேன்" என்றான், கோபால்.

புல்வெளியிலிருந்து நடை பாதைக்கு வந்த போது இன்னொரு பாட்டரி விளக்கு இவர்களை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தது. அந்த விளக்குக்குப் பின்னாலிருந்தவன் இவர்கள் அருகில் வந்ததும் கோபாலின் கரங்களில் இன்னமும் நினைவு திரும்பாத நிலையில் துவண்டு கிடந்த மஞ்சுளாவைக் கண்டதும் விழிகள் பிதுங்கத் திகைத்துத் திக்பிரமை பிடித்துப் போய் விட்டான். அது மஞ்சுளாவிடம் மாறாத பாசம் கொண்டிருந்த வேலப்பன்தான்.

"ஐயா, இது... குழந்தைக்கு என்னங்க? இப்படிக் கொடுங்க புள்ளையை" என்று பேச முடியாத நிலையில் தவித்துப் போனான் வேலப்பன்.

"வேண்டாம், வேலப்பா. நாங்கள் மஞ்சுளாவைப் பங்களாவுக்குக் கொண்டு போகிறோம். நர்ஸ் நிர்மலா இங்குதான் இந்தத் தோப்பில் எங்கோ இருக்கிறாள்... யாரோ ஒரு மர்ம மனிதனும் இங்கு ஒளிந்து கொண்டிருக்கிறான். அவன் பிடியில்தான் அவள் சிக்கியிருக்கிறாள். ரொம்பவும் ஆபத்தான நிலையில் இருக்கிறாள் நிர்மலா. ஆனால் ஜாக்கிரதை! எதிரி ஆபத்தானவன். உன்னிடம் ஏதாவது தற்காப்புக்கு ஆயுதம் இருக்கிறதா?" என்று கேட்டான் சேகர்.

"ஆயுதந்தானே?" என்று கேட்ட வேலப்பன் அங்கு அருகில் விழுந்து கிடந்த ஒடிந்ததொரு மரக் கிளையின் குச்சியை எடுத்து ஒடித்து ஒழுங்கு செய்து கொண்டான். நான்கடி நீளமுள்ள உறுதியான கம்பாகக் காட்சி அளித்தது, அது சிறிது நேரத்தில்.

"எந்தத் திக்கில் சொல்கிறீர்கள்?" என்று கேட்டுத் துடிப்புடன் நின்றான் வேலப்பன்.

"அதோ, அங்கே... நன்றாகத் தேடிப் பார்" என்று மஞ்சுளா மயங்கிக் கிடந்த திசையைத் தன் டார்ச் விளக்கைக் கொண்டு சுட்டிக்காட்டி விட்டு, "உன்னால் முடியுமானால் மறைவிடத்திலிருந்து பயமுறுத்தி அவனை வெளியேற்று. என் நண்பன் கோபாலையும் உனக்கு உதவிக்கு அனுப்புகிறேன்..." என்றான். சேகர் சட்டென்று தன் பேச்சை நிறுத்தினான். காரணம் வேலப்பனின் பார்வை வேறு எங்கோ லயித்திருந்ததுதான். பங்களா இருந்த இடத்துக்கு எதிர்த் திசையில், மரங்கள் செறிந்த பகுதிக்கு அப்பால் பளீரென்று ஓர் ஒளி வீசிக் கொண்டிருந்தது. அந்த ஒளியைத்தான் வேலப்பன் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த அமைதியான இரவின் காற்று, ஒலிகளை மிக ஸ்பஷ்டமாக உணர்த்திக் கொண்டிருந்தது. ஒரு மோட்டார் கார் எஞ்சினின் உறுமலும் அதை அடுத்து அது பெருத்த ஓசையுடன் வேகமாகக் கிளம்பிச் செல்லும் ஓசையும் நன்றாகக் கேட்டன.

"அது காளியப்பனுடைய டாக்ஸி போலிருக்கிறதே!" என்றான் கோபால்.

"காளியப்பன்தான்" என்று வேலப்பவின் வாயும் முனகிற்று. அதில் சந்

எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும். எழுத்தறிவிக்கும் இந்த விழாவை அக்ஷராப்பியாசம் என்பர். 'அக்ஷரம்' என்னும் சொல்லுக்கு எழுத்து, அழிவில்லாதது என்று இரு பொருள் உண்டு.



இந்தில் வழியாதது இம்பநில் வழியாது என்பதனல் எழுத்தோடு அழிவில்லாத பரம்பொருள் நினைவையும் தொடக்கத்திலிருந்தே ஊட்ட முனைகிறது நமது பாரத கல்வித் திட்டம். 'ஓம் நமோ நாராயணய, ஓம் நமசிவாய' என்று கற்பிப்பதோடு அக்ஷராப்யாசமும் செய்து வைக்கும் பண்பு பாரதத்தின் தனிப் பெருமை.

உலகின் எழுத்தெல்லாம் அகரத்தையே முதலாக தாகக் கொண்டது என்பதையும் சுட்டிக் காட்டுகிறது அக்ஷரம் என்னும் சொல்.

அகர முதல எழுத் தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

தமிழ் மறையின் முதல் குறளும் இப்பேருண்மையை எடுத்துக் காட்டுவதோடு, இறை உணர்வையும் நினைவு கூறுவதுதானே ?

அறத்தை அடிப்படையாகக் கொண்ட கல்வியே சிறந்த கல்விமுறை; பிஞ்சு உள்ளங்களைச் சரியான பாதையில் இட்டுச் செல்வதற்குச் சிறந்த வழி. நம் ஆன்றோர் அநுபவ ரீதியில் கண்ட இம்முறையைத் தூய்மையான நோக்கோடு பின்பற்றுவதே பெருமை தரவல்லது.

(குல்பதி ஸ்ரீ பாலகிருஷ்ண ஜோஷி ஸ்ரீ சங்கரபால வித்யாலயத்தின் ஆண்டு விழாவில் கூறியதை ஆதாரமாகக் கொண்டது இக்கருத்து.) --ரா. வி.

---

தேகமோ, ஆர்வமோ, ஆத்திரமோ ஏதுமில்லை.

''அந்தப் பக்கத்தில் பிரதான ரஸ்தா செல்கிறது. அவன் தன் வண்டியை அங்கு நிறுத்தி இருந்திருப்பான். இப்போது அதைக் கிளப்பிக் கொண்டு போகிறான்'' என்று கூறியவன் சேகரின் பக்கமாகத் திரும்பி, ''நீங்கள் குறிப்பிட்ட அந்த நபரை இன்னமும் தேட வேண்டும் என்கிறீர்களா ?'' என்று கேட்டான்.

'' ஆமாம்.... நிர்மலாவைக் கண்டு பிடி'' என்று துரிதப்படுத்தி அனுப்பினான் சேகர். வேலப்பன் ஒரு கையில் கழியுடனும் மறு கையில் டார்ச் விளக்குடனும் வேகமாக இருளைக் குலைத்துக் கொண்டு செல்லலானான்.

இதற்குள் கோபால் மஞ்சுளாவுடன் பங்களாவைச் சமீபித்து விட்டான். தன் கைத் தடியை ஊன்றியபடி மெதுவாக நடந்து வந்து கொண்டிருந்த சேகர், கோபால் விரைவாகச் செல்வதற்குத் தோதாகத் தன்னிடமிருந்த டார்ச் விளக்கைக் காட்டிக் கொண்டு நடந்தான்.

பங்களாவின் வராந்தாவில் நின்று கொண்டிருந்த கோகிலாவும் காவேரியும் கோபாலைக் கண்டதும் பரபரப்புடன் உள்ளே விரைவதைத் தூரத்திலிருந்தே கவனித்தான் சேகர். மஞ்சுளாவின் பளு கோபாலின் நடையில் ஒரு புதிய வேகத்தை உண்டாக்கியிருந்தது. உள்ளே நுழைந்த அவன் மாடிப் படிகளில் ஏறினான். அவனைத் தொடர்ந்தார்கள் பெண்கள் இருவரும்.

கோபால் தன் கரத்தில் மயங்கிக் கிடந்த மஞ்சுளாவை மஞ்சத்தில் கிடத்தியதைப் பார்த்ததுமே கோகிலா பரபரப்புடன் மாடி வாசலுக்கு ஓடி ஓர் அறையின் கதவை வேகமாகத் தட்டினாள். ''மோகனா, மோகனா...! சீக்கிரம் ஓடி வா. உன் உதவி உடனே இங்கு தேவையாக இருக்கிறது'' என்று குரல் கொடுத்தாள்.

மஞ்சுளாவைப் படுக்கையில் விட்டு நிமிர்ந்த கோபால் கைக்குட்டையால் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு திரும்பிய போது அங்கே வந்த சேகர், ''கோபால்.... தோட்டத்தில் நிர்மலாவைத் தேடிக் கொண்டிருக்கும் வேலப்பனுக்கு உதவியாகப் போ'' என்று அவனைக் கீழே அனுப்பினான்.

பிறகு மஞ்சுளாவின் அருகில் சென்று சிராய்த்துச் சிவந்திருந்த அவளது முழங்கால்களுக்கு அடியில் தலையணை ஒன்றைத் தட்டி உப்ப வைத்து இதமாக வைத்தான். அருகிலிருந்த காவேரி ஒரு போர்வையை எடுத்து மஞ்சுளாவின் மீது போர்த்தினாள். பிறகு ஓடிச் சென்று கொதி நீரும் அதில் நனைத்துப் பிழிந்த ஒரு டவலுமாக ஓடி வந்தாள். ஆவி பறக்கும் கதகதப்புடன் அந்த டவலைப் பிழிந்து மஞ்சுளாவின் தலையில் வைத்து ஒத்தடம் கொடுத்தாள். சேகர் அவள் பஞ்சுக் கைகளைத் தன் உள்ளங்கையில் எடுத்து வைத்துக் கொண்டு பார்த்தான். அவை ஜில்லிட்டிருந்தன. அவன் அவளது நாடித் துடிப்பைச் சோதித்தான். பலமற்று, ஆனல் வேகமாக இயங்கிக் கொண்டிருந்தது அது. சோதனையிடும் அவன் கண்கள் மஞ்சுளா நினைவு தப்பிப் போவதற்கான காரணங்களை ஆராய்ந்தன. தாடையில் ஒரு சிறு வீக்கமும் ரத்தம் உறைந்து கறுப்பாகவும் இருந்தது. அது பலத்த அடியினல் ஏற்பட்டது. அடுத்த அடி அவளது வாயின் மீது விழுந்திருக்கிறது. விலகி இருந்த கீழ் உதட்டிலிருந்து ரத்தம் வழிந்திருந்தது. தன் கைக் குட்டையால் அவள் கழுத்துக்கு வழிந்திருந்த ரத்தக் கறையைச் சேகர் துடைத்துக் கொண்டிருந்தபோது பின்னல் ஈனமானதொரு குரல் கேட்டுத் திரும்பினன்.

(தொடரும்)

# ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிட்டிகல் லாபரேட்டரிஸ்

(இந்திய அரசினரின் விவசாய, விநியோக ஆலோசகரின் அங்கீகார சான்றிதழ் பெற்றவர்கள்.
இந்தியன் ஸ்டாண்டர்ட் நிறுவன உறுப்பினர்)

"ஸ்ரீஅம்மே நாராயண நிவாஸ்"
54, தம்பு செட்டித் தெரு
சென்னை - 1




போன்: 20401/20402/20403
P. B. X. 3 லைன்கள்
தந்தி: "COCHUTNI"

## தரத்தை விரும்பும் நேயர்களுக்கு!

மிளகு, சீரகம், வெந்தயம் போன்ற சரக்குகள்; அரைவை செய்த சாம்பார் பொடி, ரசப் பொடி, கறிப்பவுடர் (மசாலாத் தூள்) முதலியவை; புண்ணாக்கு வகைகள்; கொழுப்புகள் மற்றும் கடலை எண்ணெய், நல்லெண்ணெய், தேங்காய் எண்ணெய், வெண்ணெய் நெய் போன்ற பால் பண்ணைப் பொருள்கள்; பெப்பர்மின்ட்கள், கேக், பிஸ்கத்துகள் வகையறா; தேன்; ஸ்குவாஷ்கள் சிரப்கள், கார்டியல்கள் போன்ற பான வகைகள்; ஜாம் ஜெல்லி மற்றும் மார்மலேட் போன்ற பழங்களிலுள்ள தயாரிப்புகள்; ஊறுகாய்கள்; நெல் மற்றும் தானியங்கள்; பருப்பு வகைகள்; சோடா பானங்கள்; பெருங்காயம் மற்றும் உணவுப் பொருள்களும், தின்பண்டங்களுக்கான கலர் வகைகள் முதலியவற்றையும் "அக்மார்க்" ஸ்டாண்டர்ட் மற்றும் I. S. I., F. P. O., கோட்பாடுகளுக்கு இணங்கவும், உணவு கலப்படத் தடை சட்டத்திற்கு ஏற்பவும் நவீன சாதனங்களுடன் கூடிய எமது ஆய்வுக் கூடத்தில் நிபுணர்களின் மேற்பார்வையில் பரிசோதித்து, தர அளவைகளுடன் அளிக்கிறோம்.

தங்களது வியாபாரப் பண்டங்களின் தரத்தில் அக்கறைகொண்ட உணவுத் தயாரிப்பாளர்கள் மொத்த விற்பனையாளர்கள், சில்லரை வியாபாரிகள் அனைவருக்கும் எங்களது சேவை எப்பொழுதும் கிடைக்கும்.

கட்டண விபரங்களுக்கு எழுதவும்:
**R. N. ராமமணி,** B. Sc.,
(மானேஜிங் புரொப்ரைட்டர் & டைரக்டர்)

---

ஆரோக்கியத்திற்குச் சிறந்தது — பரிசோதித்த தண்ணீர்! கிணறு மற்றும் டியூப்வெல் தண்ணீரைப் பயன்படுத்த சகல வசதிகளுடன் கூடிய எமது லாபரெட்டரியில் மிதமான கட்டணத்தில் பரிசோதனை செய்து உதவுகிறோம்.

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
— ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

OGL-127/71 TAM

---

# அமரர் தேவன் தமிழ்ப் பத்திரிகையாளர் பயிற்சிப் பள்ளி

## மனீஸ் டியூடோரியல் கல்லூரி மதராஸ் - 18

**வகுப்புகள்: 1971 ஜூன் மாதம் 7ம் தேதி ஆரம்பமாகின்றன**

பத்திரிகைத் தொழிலின் பல்வேறு பிரிவுகளில் பயன்தரும் வகையில் அனுபவம் முதிர்ந்த ஆசிரியர்களால் பயிற்சி அளிக்கப்படும்.

இன்று முதல் மாணவர்கள் சேர்க்கப் படுகிறார்கள். குறிப்பிட்ட எண்ணிக்கைக்குமேல் சேர்க்கப்படமாட்டார்கள். தபால் மூலமும் பயிற்சி அளிக்கப்படும்.

15 முதல் 50 வயது வரை உள்ள ஆண்களும் பெண்களும் பயிற்சி பெறலாம்.

# கடுங்கோடையின் சோர்வை நீக்கி
# புத்துணர்வு அளிக்கும் கிஸான் ஸ்குவாஷ்

## அன்றே பறித்த பழத்தின்
## சாறு தரும் சத்தெல்லாம் உள்ளது
## கிஸான் ஸ்குவாஷ்

கடும்கோடையில் குழந்தைகள் சோர்வையும், கணவர் சலிப்பையும், விருந்தினர் அலுப்பையும் தவிர்க்க உடனே ஒரு கிளாஸ் சத்துமிகு கிஸான் ஸ்குவாஷ் கனிரசம் அளித்திடுங்கள். அவர்கள் முகம் எப்படி மலருகிறது எனக் கண்டு களியுங்கள். (ஒரு பாட்டிலில் 16 கிளாஸ் தயாரிக்கலாம்)

உங்களுக்கும் சிறந்தது. அது நோய் எதிர்ப்பு சக்திக்கு தேவையான வைட்டமின் C சத்து இயல்பாகவே இருப்பது கிஸான் ஸ்குவாஷ். நல்ல கனிகளும் தூய கரும்புச்சர்க்கரையும் சேர்ந்து தயாராகும் கிஸான் ஸ்குவாஷ் கிடைப்பவற்றில் மிகச்சிறந்தவை. இந்தியாவில் அவைகள் ஏராளமாக விற்பனையாவதில் வியப்பில்லை.

தேர்ந்தெடுக்க அருமையான சுவையில் 5 வகைகள் ஆரஞ்சு, லெமன், மாங்கோ, லெமன்பார்லி, லைம்ஜூஸ் கார்டியல்.

கிஸான் ப்ராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்-16




**கிஸான்** தோட்டக்கனிகளின் தீஞ்சுவையெல்லாம் வீட்டினுள்ளே அளித்திடுமே!

KP-5763

# கவிதை பிறந்த கதை

## கனவு அரும்பவில்லை:
## முகம் திரும்பவில்லை!

எண்ணத்தை வண்ணத்தால் குழைத்து வரைந்தால் அது ஓவியமாகிறது; அதே எண்ணத்தை வார்த்தைகளால் வடித்தால் அது காவியமாகிறது. கண்ணுக்குக் கவர்ச்சி அளிப்பது ஓவியம்; கருத்துக்கு விருந்தளிப்பது காவியம். இந்தக் காவியம் எப்படி யெல்லாம் கருவாகி உருவாகி வெளிவருகிறது!

கவிஞர் தமிழழகனுக்கு வேண்டிய நண்பர் ஒருவர் ஒருத்தியைக் காதலித்தார். ஆனால் அவளோ அவரை விரும்பவில்லை! ஒருதலைக் காதல். என்றாலும் அவருக்கோ அவள் நினைவே அல்லும் பகலும் இருந்தது. விழித்தாலும் உறங்கினாலும் அவள் உருவம் கண் முன் தோன்றி மென்முறுவல் செய்தது. அவளை அடையமாட்டோமா என்ற ஏக்கம் அவரை வாட்டி எடுத்தது. நண்பரின் ஏக்கத்தை மாற்றக் கவிஞர் முயன்றார். அதன் விளைவு? ஒரு கவிதை பிறந்தது.

எங்கோ எங்கோ போகின்றாய் - நித்தம்
எதையோ எண்ணி வேகின்றாய்!

அங்கோர் கனவும் அரும்பவில்லை - அவள்
ஆசை முகமும் திரும்பவில்லை!

தன்நிழ லுக்குள் ஒதுங்குவதும் - அது
தன்நிறம் என்றே பதுங்குவதும்

உன்வலிப் பார்வையின் வெறுங்கதையாம்; - அது
உனக்கே புரியாப் பெரும் கதையாம்!

காதலித்த நண்பருக்கு இந்தக் கவிதையை எழுதி அனுப்புகிறார் தமிழழகன். நண்பர் கவிதையைப் படிக்கிறார். ஏக்கப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்த அவருக்கு, இந்தக் கவிதையின் வரிகள் சற்று ஆறுதல் அளிக்கின்றன. அவர் மேலும் படிக்கிறார்:

விண்ணும் கடலைத் தொடுவதில்லை - அதன்
வெறியும் தழுவிப் படர்வதில்லை!

கண்ணுள் கண்ணுள் காணுமெலாம் - உயிர்க்
காதலும் ஆகி விடுவதில்லை!

கானல் நீராம் அவையனைத்தும் - பொய்ச்சேர்
காட்சித் தோற்றம் அவையனைத்தும்!

ஆனிவ் வுண்மை அறிந்துவிடின் - அன்றே
அவளோ டுறவும் புரிந்துவிடும்!

கவிதை முழுவதும் படித்தார் நண்பர். தமக்காகத் தம் நண்பர் எழுதி அனுப்பிய கவிதையைப் படித்து, பிறகு மனம் மாறினார். எதை எதையோ எண்ணி ஏக்கக் கடலில் மூழ்கித் தவித்த நண்பருக்குத் தெளிவு பிறந்தது தெள்ளு தமிழ்ப் பாடலால்.

சென்னை திருவொற்றியூரில் கவிஞர் தங்கியிருந்த சமயம். அங்கே நாள்தோறும் காலையில் கிணற்றில் நீர் இறைத்துக் குளிக்க வேண்டும். அப்போது பார்த்து ஒரு சிட்டுக் குருவி நாள் தவறாமல் கிணற்றுச் சுவரில் வந்து உட்கார்ந்து கொண்டு தன் நெல்மூக்கு அலகை அழகாக அப்படியும் இப்படியும் திருப்புவதும், தன் வாலை ஆட்டிக் கொள்வதும், பின் ஓடும் தண்ணீரில் தன் உடலை நனைத்துக் கொள்வதுமாக வேடிக்கைகள் நிகழ்த்தும். இந்த அழகான காட்சியைத் தினசரி குளிக்கும் போதெல்லாம் கவனித்துக் கொண்டே வந்தார் கவிஞர் தமிழழகன். நாளடைவில் ஓர் அழகிய கவிதை பிறந்தது. இதோ அந்தச் சிட்டுக் குருவி:

சின்னஞ் சிறுமணிச் சிட்டிது பார்! - முல்லைச்
சிறகென விம்மிடும் மொட்டிது பார்!

என்னரு கேவலும் பிஞ்சினைப் பார்! - அதன்
இளமைத் துடிப்புறும் நெஞ்சினைப் பார்!

உருளும் சிறிய விழிகளைப் பார்! - கரும்
உளுந்துக்கண் பேசும் மொழிகளைப் பார்!

புரளும்நெல் மூக்கும் பொலிவினைப் பார்! - அந்தப்
பொரிமூக்கு நெல்கொத்தும் சிறியநெல் பார்!

என்று கவிஞர் பட்டுச் சிட்டைப் 'பார்' என்று வர்ணிக்கும்போது, கவிஞர் பார்த்த அதே சிட்டு நம்முடைய கண் முன்னும் தோன்றுகிறதல்லவா?

பேட்டி: பி. வி. கிரி.







அவர்கள் மனமொத்த தாம்பத்தியம் நடத்தினார்கள், கண்டவர்கள் எல்லாம் மெச்சும் அளவுக்கு. கணவன் — மனைவி இருவரும் நிம்மதியாக வாழ்க்கை நடத்துவதில் வியப்பென்ன இருக்கிறது? இதில் இருக்கிறது.... அவள் நொண்டி ! அவன் அழகன்.

கோகிலா பிறவியில் நொண்டியல்ல. சிறு வயதில் ஒரு விபத்தில் நொண்டியானவள். ஆனால் பணக்காரி.... அதனால்தான் அவளுக்குச் சேகரைப் போன்ற ஓர் அழகான படித்த வாலிபன் கிடைத்தான். அது காதல் திருமணம் அல்ல.... சேகர், இறந்து போன கோகிலாவின் தந்தையால், கோகிலாவுக்காக விலைக்கு விற்கப்பட்டவன்! இருப்பினும் தனக்கு இவள்தான் என்று நிர்ணயிக்கப்பட்டபின், அந்த உறவில் அவன் திருப்தி கண்டவன். கணவன் திருப்தியாக இருக்கும் போது மனைவிக்கு மட்டும் வாழ்க்கை கசக்குமா என்ன?

கோகிலா மகிழ்ந்தாள்.... வாழ்ந்தாள்...

வாழ்க்கையில் சிலருக்கு எல்லா வசதிகளும் இருந்தாலும் ஏதோ ஒரு குறை இருப்பதாகவே தோன்றும் ! அந்த உணர்வு இவர்களுக்கும் இல்லாமல் இல்லை. அதுவும் முக்கியமாகக் கோகிலாவுக்கு....

சேகர் வெளியில் அழைக்கும்போதெல்லாம், அவள் உடன் போக மறுத்து விடுவாள் — அது குறையாகப் படவில்லை. தனக்குத் தேவையானதை மட்டும் வாங்கிக் கொடுத்து விட்டு அவள் மிகவும் சாதாரணமாகவே இருப்பது — அவனுக்குப் பெரிய குறையாக இருக்கவில்லை.

இவ்வளவு சொத்து இருந்தும் கணவன் தினமும் வேலைக்குப் போகிறானே என்பதும் அவளுக்குக் குறையாகத் தெரியவில்லை. வேலை செய்து சம்பாதிப்பது புருஷ லட்சணமல்லவா?

பின் என்ன குறை ?

அவளைச் சமீபத்தில் பரிசோதித்த டாக்டர், அவளுக்கு எப்போதுமே குழந்தை பாக்கியம் கிடையாது என்று சொல்லி விட்டதுதான்!

'' குழந்தை இல்லாவிட்டால் என்ன?'' என்று அவளுக்கு ஆறுதல் சொன்னவன் சேகர் தான், கணவன் என்கிற முறையில் !

ஆனால் அது அவன் அவளுக்காகச் சொன்னானா, இல்லை உண்மையாகவே சொன்னானா என்றுதான் அவளால் நிச்சயிக்க முடியவில்லை.....

இல்லை, உண்மையாகத்தான் சொல்லியிருக்கிறான் என்று நம்பும் அளவுக்கு அவன் அவளிடம் நடந்து கொண்டான்....

இருப்பினும் அந்தக் குறை அவளுக்கு மிகவும் பெரிதாகத் தெரிய ஆரம்பித்தது....

எல்லோருடைய வாழ்க்கையின் ஓட்டமும் எப்போதும் ஒரே சீராக இருப்பதே இல்லை....

ஒரே மாதிரியான வாழ்க்கையில் சலிப்பு ஏற்படுவதும் சகஜந்தானே ?

சேருபவர்கள் சேர்ந்தால், கெடாத மனமும் கெடும் என்பது உலக வழக்கு.

காரியாலயத்தில் புதிதாகச் சேர்ந்த இரண்டொரு நண்பர்கள், சேகருக்குப் புதிய உலகத்தைப் பல்வேறு கோணங்களில் காட்டினார்கள்.

'நொண்டிப் பெண்ணுடன், இப்படி ஓர் அழகான வாலிபன் குடித்தனம் நடத்துவதா' என்று பட்டும் படாமல் உபதேசித்தார்கள். அதைச் சேகர் சீரியஸாக எடுத்துக் கொள்ளாத போது கொஞ்சம் அழுத்தமாகவே கூறி, அவன் மனத்தில் சலனத்தை உண்டாக்கினார்கள். அவனிடம் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்பட்டு வந்த மாறுதலை, கோகிலா கவனிக்காமல் இல்லை. இருப்பினும், அவன் வீட்டில் காணாத இன்பத்தை வெளியில்

# நொண்டி வாழ்க்கை

ரா. வேங்கடசாமி



காணும் போது, தான் ஏன் அதற்குக் குறுக்கே வேலி போட வேண்டும் என்று அவள், அவன் போக்குக்கு விட்டது, அவள் செய்த முதல் தவறு: அதாவது மாபெரும் தவறு! சம்பளப் பணம் எப்படியோ செலவாகி விட்டது என்று அவன் சொன்னபோது, அவள் அதற்காகக் காரணம் கேட்டுக் கொண்டு இருக்கவில்லை. நிறையப் பணம் வீட்டில் இருக்கும் போது, அந்தப் பணம் எதற்கு என்று அவள் விட்டு விட்டது அவனுக்கு வழிகாட்டியாக அமைந்து விட்டது. நேரங்கெட்ட நேரத்தில் வருவது... வீட்டில் சாப்பிடாமல் இருப்பது இவைகளெல்லாம் அன்றாட வாடிக்கைகளாயின !

அவள் குறையுள்ளவள்.

நொண்டி... குழந்தையைப் பெற்றுத் தர முடியாதவள்..... அவள் கணவனை எப்படித் திருத்த முடியும் ?

பணத்தால் மிரட்டலாம்....

அதைக் காரணமாகச் சொன்னால், அந்தப் பணத்தை அவள் யாருக்குச் செலவு செய்யப் போகிறாள்....? என்கிற கேள்வியும் அவனிடமிருந்து பிறக்கலாம்! அதற்கு அவள் பதில் என்ன?

நொண்டியான போதே அவள் வாழ்க்கையும் நொண்டியாகப் போய்விட்டது என்பதை அவளும், அவளது இறந்து போன பெற்றோர்களும் தெரிந்து கொண்டிருக்க வேண்டும் !

பணத்தால் எதையும் சாதிக்க முடியுமா? கணவனுடன் இணைந்து போவதுதான் நல்லது என்று அவள் முடிவு செய்து கொண்டபோது சேகர் வெகு தூரம் முன்னேறி யிருந்தான்....

அதற்குக் காரணம், இன்னொருத்தி.....

அவள் பெயர் மாலா !

அவன் காரியாலயத்தில் அவன் வேலை பார்த்து வந்தவள். அழகி. வேலி இல்லாதவள். வறுமையில் சேகரோடு உறவாட முன் வந்தவள்.

அழகுக்கும் பணத்துக்கும் அடிமையாகிவிடக் கூடியவள்... அப்படிப் பட்ட ஒருத்தி சேகரைப் போன்ற ஒருவனை வளைப்பதா கடினம்?

முதலில் பயந்தவன், கண்டிப்பதற்கு யாருமில்லை என்கிற தைரியத்தினாலும், மாலா கொடுத்த மயக்கத்தினாலும் துணிந்து விட்டான்.....

இரண்டாவது குடித்தனம் ஆரம்பமாகி விட்டது. தாலி கட்டிய மனைவி ஒருத்தி.... தாலி கட்டாத மனைவி ஒருத்தி.

இரட்டை வாழ்க்கை நடத்த வேண்டிய அவசியம் சேகருக்கு.... கோகிலாவுக்கு இது ஆரம்பத்தில் தெரிய நியாயமில்லை. அவள்தான் வெளியில் போவதில்லையே!



வேலைக்காரன் வந்து சொன்ன போது, அவனை அவள் விரட்டி அடித்து விட்டாள், முக்கியத்துவம் கொடுக்காமல். ஆனால் சேகர் சில நாட்களில் வீட்டுக்கு வராமல் இருந்த போதுதான், அவளுக்கு நிலைமை புரிந்தது. அப்போது மட்டும் அவளால் என்ன செய்ய முடியும்?

இரண்டொரு தடவைகள் கேட்டாள். அவனும் பதில் சொன்னான். அவளுக்குத்தான் திருப்தி ஏற்படவில்லை.

சம்பளம் வருவது நின்று போயிற்று. அத்துடன் வீட்டில் இருக்கும் பண

மும் கொஞ்சம் கொஞ்சமாகக் காலியாகிக் கொண்டு வந்தது.

பரம்பரையாக இப்படிப்பட்ட சம்பவங்கள் நடப்பதில்லையா என்று நீங்கள் கேட்கக்கூடும். ஏன் சிலப்பதிகாரக் காலத்திலிருந்தே இப்படி நிகழ்வது சகஜந்தானே என்றும் சொல்வீர்கள். இல்லையா? உண்மைதான். ஆனால் இதுவரையில் பழையதாகவே வந்த இந்தக் கதை இனிமேல்தான் வேறு திசையை நோக்கிப் போகிறது.....

கோகிலா பேசாமல் இருந்தாலும், அவளுக்கு உறவினர்களான சிலர், அவளது மனத்தைக் கலைப்பதற்கென்றே முடிவு கட்டிக் கொண்டவர்கள் போல், தினமும் அவளிடம் வந்து சேகர் — மாலா பற்றிய செய்திகளைச் சொல்லாமல் இருந்ததில்லை.

'உன் பணத்தை இழுத்துப் பிடித்தால் அவன் இங்கேயே வந்து கிடக்கிறான்' என்றும், 'நீ தினமும் ரகளை செய்தால் அவனுக்கு வேறு வழி ஏது...? பேசாமல் இங்கேயே வந்து விடுவான்' என்றும் விடாமல் உபதேசம் செய்தார்கள். இரண்டொருவர் இந்தக் காட்சியைக் காண வேண்டும் என்பதற்காகவே, கோகிலாவின் வீட்டிலேயே தங்கியிருந்தனர்.

கோகிலா அவர்கள் இருந்த தைரியத்தில், கணவனைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ள வேண்டும் என்கிற எண்ணத்தில், சேகருடன் சண்டை போட்டுப் பார்த்தாள்.

சேகர் பதில் சொன்னான்: ''நீ உயிரோடு இருக்கிற வரையில் எனக்கு நிம்மதி இல்லை...'' என்று.....

சொந்தக்காரர்கள் வந்த வழியே போய் விட்டார்கள். அவர்களது முயற்சி வீணாகியது! ஆனால் கோகிலாவுக்குத் தைரியம் வந்து விட்டது. இப்போதெல்லாம் அவள் அடிக்கடி கணவனை எதிர்த்தாள். அவனும் சண்டை போட்டுக் கொண்டே, அவளிடமிருந்து பணத்தையும் நகைகளையும் கொஞ்சம் கொஞ்சமாகப் பறித்துக்கொண்டு போய் அங்கே சேர்த்தான்... இதில் கவனிக்கத்தக்க விஷயம் என்னவென்றால் மாலா, சேகரை 'இப்படிச் செய்யுங்கள். அப்படிச் செய்யுங்கள்' என்று தூண்டிவிட்டதுமில்லை. எனக்கு அது வேண்டும், இது வேண்டும் என்று அவனைத் தொந்தரவு செய்ததுமில்லை.

தூரத்தில் இருந்தால் தொல்லை என்று, பக்கத்துத் தெருவுக்கே வேறு சேகர் குடிவந்து விட்டான். இரண்டு வீடுகளுக்கும் போக வர அப்போதுதானே சௌகரியமாக இருக்கும்?

கோகிலாவினால் செய்ய முடிந்த காரியம் ஒன்றே ஒன்றுதான். எப்படியாவது தனது கணவனைத் திரும்பப் பெற வேண்டும் என்கிற நோக்கத்தில், அவனுடைய மேலதிகாரிக்கு எழுதிப் போட்டாள். அதனால் அவனுக்கும் மாலாவுக்கும் வேலை போனதுதான் மிச்சம்.

இதைக் கோகிலாவே எதிர்பார்க்கவில்லை.

அந்த 'ஆர்டர்' வந்த தினந்தான் மாலாவுக்குப் பிறந்த நாள். சேகர் அதை மிகவும் தடபுடலாகக் கொண்டாட ஏற்பாடு செய்திருந்தான்....

அவள் கழுத்துக்குத் தன் மனைவியின் முத்து மாலையைக் கொண்டு போய்ப் போடவும் முடிவு செய்திருந்தான். அந்த நேரத்தில் இப்படி ஓர் உத்தரவு வந்தால் அவனுக்கு எப்படியிருக்கும் ?

அதே வேகத்தில் கோகிலாவிடம் போனான்.

''ஆமாம்.... நான்தான் எழுதிப் போட்டேன். உங்களுக்கு வேலை போனால் என்ன? இங்கேயே இருங்கள்'' என்றாள் அவள்.

''நான் உன்னுடன் வாழ முடியாது.''

''அவளுடன் நீங்கள் எப்படி வாழ்ந்துவிடுகிறீர்கள் என்று பார்த்து விடுகிறேன்.''

உரிமை பறிபோகும் போது, உணர்ச்சி தூண்டப்படுவது இயற்கை.

வார்த்தைகள் தடித்தன.

ஏமாற்றத்தை ஒரு பெண்ணிடம் ஒப்புக் கொள்ள முடியாத கோழையாகிவிட்ட சேகர் ஆத்திரத்தால் அவளைக் கத்தியால் குத்தி விட்டான்.

அவள் மேலே சாய்ந்தவுடன் வெளியில் ஓடி விட்டான். ஓடியவனுக்குப் புகலிடம் மாலாவின் வீடுதானே? அவளிடம் போய் நடந்ததைச் சொன்னவுடன், அவள் பதறிப் போய், நேராகக் கோகிலாவிடம் ஓடி வந்தாள்.

கோகிலாவின் உயிர் போகவில்லை.

''இப்படி ஆகிவிட்டதே, உங்களுக்கு!'' என்று மாலா கதறி அழுத போதுதான் கோகிலா தன் கண்களைத் திறந்து அவளைப் பார்த்தாள்.

சேகர் அவளிடம் மயங்கியதில் வியப்பொன்றும் இல்லை. மாலா நல்ல அழகிதான். தன்னை விட அவளே சேகருடன் வாழத் தகுதியானவள்.... ''அவர் எங்கே?'' என்று மெல்லிய குரலில் கோகிலா கேட்டாள்.

''வீட்டில் இருக்கிறார்.....''

''பயப்படாதே.... நடந்தது நடந்துவிட்டது. நீயாவது அவருடன் நிம்மதியாக இரு.''

மாலா அழுதாள். அவளுக்கும் இனி வாழ்வேது? சேகரைப் போலீஸார் அல்லவா, கொண்டு போய் விடுவார்கள்?

யாரோ செய்த உதவியினால் டாக்டர் ஒரு பக்கம் போலீஸார் ஒரு பக்கம் வந்தார்கள். டாக்டர் கையை விரித்து விட்டார், கோகிலாவின் நாடித் துடிப்பைப் பார்த்தவுடன்.

போலீஸார் கோகிலாவின் வாக்குமூலத்தை ஆஸ்பத்திரியில் பதிவு செய்து கொண்ட போது அவள் பேசியது கொஞ்சம்.

''என் கணவர் இன்னொருத்தியுடன் வாழப் போய் விட்டார் என்பதால் நானே தற்கொலை செய்து கொண்டேன். என் மரணத்துக்கு யாரும் பொறுப்பல்ல!'' அவளே இப்படிச் சொல்லிவிட்ட பிறகு வழக்குப் போட வேண்டிய அவசியம் எங்கிருந்து வந்தது ?

ஏன் அவள் இப்படிச் சொன்னாள் என்றுதான் சேகருக்கும் மாலாவுக்கும் விளங்கவில்லை.... முதலில் வேறு எண்ணத்துடன் இருந்தாலும், கர்ப்பிணியான மாலாவைப் பார்த்த பிறகு, தன் எண்ணத்தை உடனே மாற்றிக் கொண்டாள் கோகிலா என்பது, இறந்தவளுக்கு மட்டும் தெரிந்த இரகசியம்! அவளால் முடியாததை இன்னொருத்தி முடித்துக் காட்டும் போது.... அதற்கு ஆதரவு கொடுப்பதுதானே பெண்ணுக்குப் பெருமை! கோகிலா அந்தத் தகுதிக்கு உரியவளாகி விட்டாள்.

# அடிக்கடி சிறுநீர் கழிப்பது

அடிக்கடி சிறுநீர் கழிப்பது ஒரு கொடிய வியாதி. அது, பாதிக்கப்பட்டவரை நாளுக்கு நாள் மரணப் பாதையை நோக்கி இட்டுச் செல்லும்.

இவ்வியாதியால் அல்லல் படுவோருக்கு அதிக தாகம், பசி, உடல் பூராவும் வலி ஏற்படும்; உடலால் உழைக்கவோ, அல்லது மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யவோ உற்சாகமிராது. நாளுக்கு நாள் உடல் எடை குறையும். உடலில் ஒருவித நமைச்சல் ஏற்படும். சரும வியாதியால் அவதியுறுவர். கல்லீரல் மந்தமாகி, மூத்திரக் காய்கள் பலவீனமடைந்து, சரிவர இயங்காது. இந்த வியாதியை உடனடியாகக் கவனிக்காவிடில், கீல் வாயு, பார்வைக் குறைவு, தூக்கமின்மை, அதிகக் களைப்பு, உடலில் கட்டிகள் ஏற்படுவது போன்றவைகளால் கஷ்டப்பட நேரிடும்.

பழைய காலத்திலிருந்து அனுசரிக்கப்பட்ட யூனானி முறைப்படி அபூர்வ மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட "யூரிடோன்" மாத்திரைகள் இந்தக் கொடிய வியாதியை குணப்படுத்தும்.

"யூரிடோன்" மாத்திரைகளை உபயோகப்படுத்தி, ஆயிரக் கணக்கானவர்கள் பயன் அடைந்துள்ளனர். அடிக்கடி சிறுநீர் போவது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு சில நாட்களிலேயே வியாதியின் அல்லல்களிலிருந்து நிவாரணம் அடைந்து மன நிம்மதியைப் பெறுகின்றனர்.

"யூரிடோன்" சிக்கனமானது, பத்திரமானது, எளிதில் எடுத்துச் செல்லக் கூடியது. உணவு உட்கொள்ளுவதில் விசேஷக் கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. சாதாரண உடல்நல முள்ளவர்களும் நல்ல ஆரோக்கியமாக இருக்க இதை உட்கொள்ளலாம். விவரங்கள் அடங்கிய இலவசப் பிரசுரத்துக்கு எழுதவும்.

40 மாத்திரைகள் கொண்ட பாட்டில் விலை ரூ. 10. பாக்கிங் தபால் செலவு ரூ. 2 தனி.

ஒரே தடவையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாட்டில்களுக்கு ஆர்டர் அனுப்புபவர்களுக்கு பாக்கிங் மற்றும் தபால் செலவு இலவசம்.

**Barrys Remedies Laboratories (K. L.)**

G. P. O. BOX 874

CALCUTTA-1

# ஆண்களின் தேவைகளை நிறைவேற்றுகிறது ஒகாஸா



வாழ்விலே வெற்றி காண்பதற்கு வேண்டிய வலிமையை ஆண்களுக்கு அளிக்கிறது ஒகாஸா. வயதுக்கு மிஞ்சிய முதுமையைத் தடுத்து, ஆரோக்கியத்தைக் கூட்டி இளமைத் துடிப்பையும் வலிமையையும் மீட்டுத் தருகிறது ஒகாஸா. உலகெங்கிலும் இலட்சக் கணக்கான வயது வந்தவர்கள் இன்று ஒகாஸா சாப்பிடுகிறார்கள். இழந்த வலிமையை மீட்டுத் தரும் நவீன-டானிக் மாத்திரைகள் அவை.

ஒகாஸா-ஹார்மோ-பார்மா லிமிடெடின் லண்டன்-பெர்லின் தயாரிப்பு.

எல்லா பிரபல மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது. அல்லது நேராகவும் பெறலாம்.

OKASA CO. PVT. LTD.

P. O. BOX 396, BOMBAY-1.

CV 220

# விவசாயிகளே!



அதிக உற்பத்தி
செய்து
அதிகமாக சம்பாதியுங்கள்!

## அதற்கு
## யூகோபாங்க்
## நிதி உதவுகிறது

அதிக விளைச்சல் தரும் விதை வகைகள்,
சரியான அளவு உரங்கள் உபயோகித்தல்,
காலாகாலத்தில் பாசனம் செய்தல்,
இயந்திரங்களை பயன்படுத்துதல் மூலம்
தீவிர சாகுபடிக்குச் சிறிது கூடுதலாகச்
செலவிடும் பணம் உங்களுக்கு நல்ல
மகசூலைத் தருகிறது.
யூகோபாங்க் உங்களுக்கு அந்த
கூடுதல் பணத்தை கொடுத்துதவ
முடியும்.

**விவரங்களுக்கு அருகாமையிலுள்ள பாங்கின் கிளையை அணுகுங்கள்.**




தலைமை ஆபீஸ்: கல்கத்தா

யூகோ பாங்க் வளம் பெற வழி வகுத்தளிக்கின்றது

UCO-4/71

# ஆயிரத்தைக் கண்டவர்



**ப**தினைந்து வருட காலம் நகரசபைப் பள்ளியொன்றின் தலைமை ஆசிரியராக இருந்தார். ஓர் இரவில் போட்ட 'ராஜபார்ட்' வேடம், அவரது வாழ்வையே திசை திருப்பி விட்டது!

ஆர். பாலசுப்பிரமணியம் கும்பகோணம் யானையடி நகரசபைப் பள்ளியில் தலைமை ஆசிரியராக 1923 முதல் 1938 வரையில் வேலை பார்த்தவர்.

திரைப்படத் துறையில் பிரபலமாக விளங்கும் திரு எம். ஜி. ராமச்சந்திரனும், அவரது சகோதரர் திரு எம். ஜி. சக்ரபாணியும் பள்ளி நாட்களில் இவருடைய மாணவர்களே!

தலைமை ஆசிரியர் பாலசுப்பிரமணியம், வாணிவிலாச சபா நாடகங்களில், ஸ்திரீ பார்ட் வேஷம் போடுவார்! ஒரு நாள் வழக்கமாக 'ராஜ பார்ட்' வேஷம் போட்டு வந்தவர் நடிப்பதை நிறுத்திக் கொள்ள, அந்த ராஜபார்ட் வேஷம் பாலசுப்பிரமணியத்துக்குக் கிடைத்தது. அதே இரவு கோவையிலிருந்து திரைப்படப் பிரமுகர்கள் நாடகத்துக்கு வந்திருந்தனர். மறு நாளே இவரை நேரில் பார்க்க வந்து விட்டார்கள்!

ஆசிரியர் வாழ்வு மாறியது!

1938ல் முசிறி சுப்பிரமணிய அய்யர் நடித்த 'துக்காராம்' படத்தில் நடித்தார் முதன் முதலில். பிறகு பல திரைப் படங்கள் தொடர்ந்தன.

1940ல், சென்னை வானொலி நிலையத்தில், நாடகங்களில் நடிக்க அறிமுகமானார்.



ஆண்டவனும் இவரே!
அசுரனும் இவரே!

பாலசுப்பிரமணியம் நடித்த முதல் ரேடியோ நாடகம் ''ராவண வதம்''.

முதல் ரேடியோ நாடகத்திலேயே 'வதம்' செய்யப்பட்ட பாத்திரமானாலும், இன்றும் அவரது குரல் வானொலியில் ஒலிக்கிறது!

''ரேடியோ நாடகங்களில், என்னென்ன பாத்திரங்களில் நடித்திருக்கிறீர்கள்?''

''உம்... முதலில் கடவுள் வேடங்களைச் சொல்கிறேன். பரமசிவன், முருகன், ராமர், கிருஷ்ணர், மகாவிஷ்ணு.''

''ராட்சதர்களின் வேடங்கள்?''

அட்டகாசமான சிரிப்பு ஒன்று பிறக்கிறது! ''சார்! ராட்சதப் பயல்கள் வேடம்



ஒன்று பாக்கியில்லாமல் ஏற்று நடித்திருக்கிறேன். சூரபத்மன், பத்மாசுரன், இரணியன், கம்சன், இராவணன், பாணுசுரன், சிசுபாலன், கும்பகர்ணன், மாரீசன் இன்னும் பல புராண ராட்சதர்களெல்லாம் நானே! இந்த ராட்சதர்களின் உருட்டல், மிரட்டல், அதிகாரம், பயங்கரமான எச்சரிக்கை, இடிச் சிரிப்பு ஆகியவை. ரேடியோ நாடகங்களைக் கேட்பவர்களுக்கு நினைவில் இருக்குமே!''

ரிஷிகளாக நடித்த நீண்ட பட்டியலையும் அவர் தருகிறார்.

''சரித்திர நாயகர்களாகவும் நடித்திருப்பீர்களே?''

''மாமன்னர் அசோகனாக மட்டும் பதினைந்து நாடகங்களில் நடித்திருக்கிறேன்! வெவ்வேறு ஆசிரியர்களால் எழுதப்பட்ட நாடகங்கள்... மூவேந்தர்களாகவும் நடித்து விட்டேன்! சந்திரகுப்தன், சமுத்திர குப்தன், அக்பர், ஷாஜஹான், ஔரங்கசீப், சிவாஜி, ராணா பிரதாபசிம்மன், பிருதிவிராஜன் போன்ற யாரையும் விட்டு வைக்கவில்லை!''

நக்கீரர், வால்மீகி, கம்பர், இளங்கோ, ஒட்டக் கூத்தர், புகழேந்தி, பாரதியார் என்று புலவர்களாகவும் தோன்றியிருக்கிறார்.

இவை தவிர, சீன–பாகிஸ்தான் படையெடுப்பின்போது தினசரி, போர் பற்றிய சிறப்பு — வானொலி உரையாடல்களில் இவர் பங்கு கொண்டார்.

நேயர்களிடம் அமோக வரவேற்பு பெற்ற 'துபாஷ் வீடு' (போஸ்டல் ராமலிங்கம்), 'காப்புக் கட்டி சத்திரம் (கிச்சாமிஐயர்), 'ஜனதா நகர்' (வக்கீல்) முதலிய தொடர் நாடகங்களில் பாலசுப்பிரமணியத்தின் குரலைக் கேட்டிருக்கலாமே!

1960 முதல் 1970 வரை நிலைய நாடக நடிகராகப் பணி புரிந்து அண்மையில் தான் ஓய்வுபெற்றார் திரு பாலசுப்பிரமணியம். ஆனபோதிலும், ரேடியோ நாடகங்களில் நடிக்க அவ்வப்போது வாய்ப்புக்கள் வருகின்றனவாம்.

''ரேடியோ நாடகத்தில் நடிப்பதற்கேற்ப, குரல்களை மாற்றி மாற்றிப் பேசும் பயிற்சி பெற்றால், எவரும் ரேடியோ நாடகங்கள்மூலம் சிறப்படையலாம்'' என்கிறார் அநுபவம் பெற்ற இவர்.

பேட்டி : ஏ. சுவாமிநாதன்






திருமதி பி. லட்சுமி சர்மா











**பக்குவ முறை:**

2 கோப்பை மைதா மாவு
6 டேபிள்ஸ்பூன் (தலைதட்டிய அளவு) **பிரவுன் & போல்ஸன்** பேடெண்ட் கார்ன்ஃப்ளவர்
1 கோப்பை புளித்த மோர்
1 கோப்பை தண்ணீர் (சுமாராக)
2 டீஸ்பூன் (தலைதட்டிய அளவு) **ரெக்ஸ்** பேகிங் பவுடர்
2½ டீஸ்பூன் (தலைதட்டிய அளவு) உப்பு (அல்லது சுவைக்கேற்றபடி)
2 அல்லது 3 பெரிய பச்சை மிளகாய் (பொடியாக நறுக்கியது)
2 சிறிய இஞ்சித் துண்டுகள் (பொடியாக நறுக்கியது)
பொரிக்க எண்ணெ அல்லது நெய்

1. மைதா மற்றும் **பிரவுன் & போல்ஸன்** பேடெண்ட் கார்ன்ஃப்ளவருடன் மோரும் தண்ணீரும் கலந்து கெட்டியான கூழ்போல் செய்துகொள்ளவும். அத்துடன் **ரெக்ஸ்** பேகிங் பவுடர், உப்பு, பச்சை மிளகாய் மற்றும் இஞ்சியை சேர்க்கவும்.

2. அவற்றை நன்றாகக் கலந்து, 30-45 நிமிடங்கள் வரை தனியே எடுத்து வைக்கவும்.

3. நன்றாகப் பொரிப்பதற்காக வாணலியில் எண்ணெ அல்லது நெய்யை விட்டு அடுப்பின் மீது வைக்கவும். சூடு அதிகமானதும், கலவையை உங்கள் விரல்களால் சிறிது சிறிதாக எண்ணெயில் விட்டு, பழுப்பு நிறமாகவும் மொரமொரப்பாகவும் பஜ்ஜி ஆகும்வரை பொரிக்கவும். தடவைக்கு 15-18 பஜ்ஜிகளைத் தயாரிக்கலாம். (கலவையை உருண்டை உருண்டையாக எண்ணெயில் விழும்படி செய்தால், பஜ்ஜியும் உருண்டையாக ஆகும்). சூடாகப் பரிமாறவும்.

கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றைச் சுவைபட அதிமென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.




இலவசம்! புதிய பக்குவ முறை நூல் நெ. 3. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்.
தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம் / இந்தி / வங்காளி / தமிழ்/தெலுங்கு/மலையாளம்/ குஜராத்தி/ மராத்தி/ கன்னட மொழியில் இலவசமாக அனுப்ப வேண்டுகிறேன்.

பெயர் ..........................................................................

முகவரி..........................................................................

..........................................................................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக: பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட்,
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரை. லிட்.
ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்). K-4

இதுபோல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்—1. (பி ஆர்).

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1. மற்றும் அவர்களது கிளைகள்.

Bensons/5722 TM

வண்ணத்திப் பூச்சி இறகுகளின் வண்ண ஜாலங்களைக்கூட அழகுற அச்சில் வடிக்கவே... ஆந்திரப் பிரதேஷ் காகிதம்




**ஒளிசிந்தும் வண்ணங்கள்!**



# போடுவோம் புத்தகமாலை

‘மேறு’

(சமீபத்தில் தமிழ்ப் புத்தகங்களுக்கான பரிசளிப்பு விழா ஒன்றில் தமிழக முதல்வர் பூமாலைகளுக்குப் பதிலாகப் புத்தக மாலைகளைக்கூடப் போட்டுப் பாராட்டிக் கொள்ளலாம் என்று கூறிய கருத்தின் அடிப்படையில் எழுந்த சில விநோதக் கற்பனைகள்.)

## ஒரு விமரிசனம்

பாராட்டு விழா. நாவல் எழுதியவர் பாரதிபோன். 200 பக்கங்கள்; விலை: ரூபாய் நான்கு; வெளியிட்டோர்: காக்காய் பதிப்பகம், சென்னை — 101.

நாவல் நடை சரளமாகப் போகிறது என்றாலும் சில இடங்களில் திரைப்படக் கவிதை நடையாக மாறி விடுகிறது.

இந்த நூலை மாலையாக அணிவிக்க வசதியாக மேல் அட்டையின் இரு பக்கங்களிலும் இரும்புக் கொக்கிகள் பொருத்தியிருக்கிறார்கள். எவர்சில்வர் கொக்கிகளாக இருந்திருந்தால் புத்தகத்தின் தரம் உயர்ந்திருக்கும்.

## ஒரு விளம்பரம்

வெளிவந்துவிட்டது. திருத்தி அமைக்கப்பட்ட இரண்டாம் பதிப்பு. புகழ் ஏணி! புகழ்பெற்ற நாவலாசிரியர் நஞ்சுகண்டனின் கைவண்ணம்.

இரண்டாவது பதிப்பின் பிரதிகளில் மாலை அணிவிக்கும் வசதியைச் சிறந்த முறையில் திருத்தி அமைத்திருக்கிறோம். கொக்கிகளுக்குப் பதிலாக முன் அட்டையின் நீளவாக்கில் சன்னமான பிளாஸ்டிக் குழாயைப் பதித்து வைத்திருப்பதால் புத்தக முகப்பு சாயாமல், கவிழாமல் கம்பீரமாக மாலையாக அணிவிக்கப் படும்போது இது தோற்றமளிக்கும்.

விவரங்களுக்கு: கருடப்பா பதிப்பகம், சென்னை — 121.

## ஒரு பிறந்த நாள் விழா

குழந்தை குண்டான கிருஷ்ணன். மன்னிக்க வேண்டும் — கோபால கிருஷ்ணன் இன்று ஐந்தாம் வயதைத் தாண்டி ஆறாம் வயதில் அடியெடுத்து வைக்கிறான். அவன் அறுபது வயதைத் தாண்டினாலும் இன்றுள்ள அரை டிராயரோடு.... மன்னிக்க வேண்டும். ஆரோக்கியத்தோடு சிரஞ்சீவியாக வாழ வேண்டும். அவனைப் பாராட்டும் வகையில் ‘கள்ளனும் குள்ளனும்’ ‘பூதம் காட்டிய பொக்கிஷம்’, ‘கத்தியும் கருநாகமும்’, ‘காட்டை மறந்த நரி’, ‘கண்ணாடி மாளிகை ரகசியம்’ ஆகிய ஐந்து புத்தகங்களாலான இந்த மாலையைக் குழந்தை கோபால கிருஷ்ணனுக்கு அணிவிக்கின்றேன்.

## அமைச்சரின் அறிவிப்பு

அரசாங்கத்தின் நிதி வசதி அவ்வளவு திருப்திகரமாக இல்லாத போனாலும்கூட இந்த ஆண்டு முதல் பதிப்பாளர்களை ஊக்குவிக்கும் முறையில் மிகச் சிறந்த முறையில் புத்தகங்களுக்கு மாலை போடும் வசதியை இணைத்திருக்கும் பதிப்பாளருக்கு இரண்டாயிரம் ரூபாய் பரிசு கொடுப்பதாகத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. அந்த வகையில் இந்த ஆண்டு பரிசு பெறும் ‘அடாஸ் பதிப்பகத்தாரை, உங்கள் சார்பில் பாராட்டுகிறேன். அவர்கள் தயாரிப்பு புலவர் தாமரைக் குளத்தார் எழுதிய ‘தமிழ் இலக்கியத்தில் நீர்க் குமிழிகள்’ என்ற நூலாகும்.



## குடும்ப விவகாரம்

பாராட்டு விழாவில் நாயகனாகப் போய் வீடு திரும்பிய கணவனைப் பார்த்து மனைவி கேட்கிறாள்: ‘‘என்னங்க! பெரிய பாராட்டு விழான்னு போனீங்களே! ஒரு டாக்ஸியிலே வரப்படாதா? என்னவோ மூட்டையைக் கட்டிக்கிட்டு ஆட்டோவிலே வர்றீங்களே? பூமாலை எல்லாம் எங்கே? ஜம்பமா நாற்காலியிலே மாட்டிப்பிட்டு வந்துட்டீங்களா?

விழா நாயகர் பதில் சொல்கிறார்: விடு வேறு? எல்லாம் இந்த மூட்டையிலே இருக்கு! பூமாலை போடலே! புத்தக மாலை போட்டாங்க! என் வயசுக்குத் தகுந்த வேதாந்தப் புத்தகங்களாம்!

## ஒரு வாசகர் கடிதம்

இமைப் பதிப்பக நிர்வாகி அவர்களுக்கு.

வணக்கம். உங்கள் பதிப்பகத்தின் மூலம் வெளியான ‘சங்க காலத்தில் தங்க ஆபரணங்கள்’ என்ற நூலை நான் சமீபத்தில் வி. பி. பி. மூலம் நான்கு ரூபாய்கள் கட்டிப் பெற்றேன். உள்ளே பக்கங்களைப் புரட்டினேன். ஒரே ஏமாற்றம். முதல் எட்டுப் பக்கங்களைத் தவிர மீதியெல்லாம் வெறும் வெள்ளைத் தாள்கள். இந்தப் புத்தகத்தைத் திருப்பி அனுப்பினால் நீங்கள் வேறு புத்தகம் கொடுப்பீர்களா? உடனே பதில் எழுதவும்.

தங்கப்பன்

## பதிப்பாளரின் பதில்

அன்புடையீர்,

வணக்கம். தங்கள் கடிதம். ‘சங்க காலத்தில் தங்க ஆபரணங்கள்’ என்ற எங்கள் புத்தகத்தின் இருநூறு பக்கங்களில் அச்சடிக்கப்பட்ட விஷயம் முதல் எட்டுப் பக்கங்களில் தான். மீதிப் பக்கங்களுக்கு விஷயம் கிடையாது. புத்தகம் கைக்குக் கனமாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் அதிகப்படி பக்கங்கள். கனமிருந்தால்தான் பிரதிகளைக் கோர்த்து மாலை போட இயலும். ஆகையால், புத்தகத்தில் உள்ள வெள்ளைத் தாள்களை வேறு வகையில் உபயோகப்படுத்திக் கொள்ளவும்.

நிர்வாகி,

இமைப்பதிப்பகம், சென்னை-301




இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

**1970**ம் வருஷம் டிசம்பர் மாதம் இருபத்தேழாம் தேதி. கல்கத்தா டேபிள் டென்னிஸ் ஸ்டேடியம் நிரம்பி வழிந்திருக்கிறது. தேசிய சாம்பியனைத் தேர்ந்தெடுக்கும் இறுதியாட்டம் நடைபெறுகிறது என்றால் கூட்டத்துக்குக் கேட்பானேன்? தேசிய சாம்பியன் மீர்காஸிமா, ஜகந்நாதனா' என்று கடும் போட்டி. சென்னை இண்டக்ரல் கோச் பாக்டரி ஆட்டக்காரர் ஜகந்நாதன் இறுதியில் தமது கடுமையான உழைப்பு, பொறுமை, தளராத ஆட்டம் இவற்றுக்குப் பரிசாகத் தேசிய விருதைப் பெறுகிறார். 1951ம் வருஷத்துக்குப் பிறகு தமிழ் நாட்டுக்கு இந்தப் புகழ் பெற்ற விருதைத் திரும்பக் கொணர்ந்திருக்கிறார் ஜகந்நாதன்.




''மிஸ்டர் ஜகந்நாத்! தாங்கள் டேபிள் டென்னிஸ் எப்பொழுது ஆட ஆரம்பித்தீர்கள்? உங்கள் முதல் வெற்றி என்ன?''

''நான் புரசைவாக்கம் எம். டிடி. பள்ளியில் பன்னிரண்டாவது வயதில் நான்காவது பாரம் படித்துக் கொண்டிருந்தேன். அச்சமயம் டேபிள் டென்னிஸ் ஆடப் பயிற்சி பெற்றேன். 1958ம் வருஷம் கத்தோலிக்க சென்டரில் பதக்கம் பெறாதவர்களுக்கான டேபிள் டென்னிஸ் போட்டி நடந்தது. முதன்முதலில் அதில் ஜயித்து, ராஜ்ய ஸீனியர் ஆட்டக்காரர் கோஷ்டியில் சேர்த்துக் கொள்ளப்பட்டேன்.''

''தாங்கள் கலந்து கொண்ட சர்வதேசப் போட்டிகளைச் சொல்கிறீர்களா?''

''1965ம் ஆண்டு யுகோஸ்லேவியாவிலும் 1967ல் ஸ்டாக்ஹோமிலும் 1969ல் ஜெர்மனியில் மூனிச்சிலும் நடைபெற்ற உலகப் போட்டிகளில் ஆடினேன். இந்த வருஷம் ஸிங்கப்பூரில் நடைபெற்ற காமன்வெல்த் டேபிள்டென்னிஸ் போட்டிக்கும், ஜப்பானில் நாகோயாவில் நடைபெற்ற உலக டேபிள் டென்னிஸ் போட்டிக்கும் இந்தியக் கோஷ்டியின் காப்டனாகச் செல்லும் பெருமை பெற்றேன். காமன்வெல்த் டேபிள் டென்னிஸ் போட்டிகளில் 16 மாட்சுகளில் ஆடி அவற்றில் பன்னிரண்டு பந்தயங்களில் ஜயித்தேன்.''

''உங்கள் சமீபத்திய அயல்நாட்டு விஜயத்தில் மறக்க முடியாத மாட்சு என்ன?''

''ஸிங்கப்பூரில் காமன்வெல்த் டேபிள் டென்னிஸ் போட்டியே இந்தியக் கோஷ்டிக்கு மறக்க முடியாத மாட்சாகும். இங்கிலாந்து கோஷ்டிக்கு எதிராக இந்தியக் கோஷ்டியினர் நான்கு பந்தயங்களில் இரண்டை ஜயித்தனர். இன்னும் ஒரு பந்தயம் ஜயித்திருந்தால் இந்தியக் கோஷ்டிக்குத் தங்கக் கோப்பை கிட்டியிருக்கும். அந்த மாட்சில் வெற்றி பெற முடியவில்லை. இந்திய கோஷ்டியினர் காமன்வெல்த் டேபிள் டென்னிஸ் போட்டிகளில் மூன்றாவது இடத்தையும் வெண்கலப் பதக்கத்தையும் பெற்றோம்.''

''ஜப்பான் உலக டேபிள் டென்னிஸ் போட்டியைப் பற்றிச் சொல்லுங்களேன்!''

''உலகப் போட்டிகள் காலை பத்து மணியிலிருந்து இரவு எட்டு மணி வரை நடந்தன. எனக்கு முதல் மாட்சே ரொம்பக் கடுமை. ஹங்கேரி நாட்டுத் தலைசிறந்த டேபிள் டென்னிஸ் மன்னரோடு ஆடித் தோற்றுப் போனேன். 1965ம் வருஷத்துக்குப் பிறகு முதல் முறையாகச் சீன உலக டேபிள் டென்னிஸ் போட்டிகளில் கலந்து கொண்டது. 'முதலில் நட்புரிமையை வளருங்கள்; போட்டி இரண்டாம் பட்சம் தான்' என்று சூ என் லாய் அவர்களது ஆட்டக்காரர்களுக்கு அறிவுரை கூறி அனுப்பியிருந்தாராம். இதுவே, 'பிங் பாங் டிப்ளமஸி' என்று இப்பொழுது அமர்க்களப்படுகிறது. உலக சாம்பியனும் இறுதிப் போட்டியில் ஸ்வீடிஷ் ஆட்டக்காரர் பெங்க்ஸனை, ஜப்பானிய ஆட்டக்காரரான இட்டோவை எளிதில் ஜயித்துவிட்டார். மூந்தைய உலகப் போட்டி இறுதியாட்டங்கள் ரொம்ப 'திரில்லிங்'காயிருந்தன. இந்த இறுதி ஆட்டம் அப்படி இல்லாதது குறைதான்!''

திரு ஜகந்நாத் பற்றி இண்டக்ரல் கோச் பாக்டரி பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு ராமநாதன் கூறுகிறார்: ''ஜகந்நாத் புகழேணியில் நாளுக்கு நாள் முன்னேறிக் கொண்டிருப்பது எங்களுக்குப் பெருமை. நாங்கள் 1969ம் வருஷமே அவருக்கு இந்திய ரயில்வேயின் தலைசிறந்த விளையாட்டுக்காரர் பரிசை வழங்கிக் கௌரவித்திருக்கிறோம்.''

இந்த வருஷம் சென்னை ஸ்போர்ட்ஸ் ரைட்டர்ஸ் கிளப்பினர் 'தலைசிறந்த விளையாட்டுக்காரர்' கோப்பையை வழங்கியிருப்பது தேசிய சாம்பியன் ஜகந்நாத்துக்குக் கிடைத்த அரிய மற்றொரு கௌரவம். — **குண்டுமணி**



குஹாலயத்தின் "போர்டிகோ"விலிருந்து புறப்பட்ட அந்தப் பெரிய கார் தோட்டத்துப் பாதையில் வழுக்கிக் கொண்டு வந்து, கேட்டின் அருகில் சிறிது தயங்கிப் பின், 'விர்' ரென்று சாலையில் திரும்பியது.

பெரிய இரும்புக் கேட்டின் ஒரு கதவைக் கந்தப்பன் தள்ளிச் சாத்தியபோது மறுபுறக் கதவை அவன் மகன் வடிவேலு, அவசரமாக உந்தித் தள்ளி மூடிவிட்டு, ஒரே ஓட்டமாகத் தோட்டத்துப் பாதையில் ஓடி பங்களாவின் வலதுபுறம் திரும்பிச் சிறிது தூரம் நடந்தான். பிறகு நின்று சுற்றும் முற்றும் பார்த்தான். பின் மெதுவாகப் பங்களாவை நெருங்கி, வராந்தாவில் ஏறி, அங்கிருந்த ஒரு பெரிய கண்ணாடிக் கதவில் முகத்தைப் பதித்தவாறு உள்ளே பார்க்க ஆரம்பித்தான்.

வடிவேலு தன்னை மறந்தவனாக "முருகா! முருகா!" என்று கூறிக் கொண்டே கன்னத்தில் போட்டுக் கொண்டான்.

அது அந்தப் பங்களாவின் பூஜை அறை! நவீன அலங்காரங்களுடன் கட்டப்பட்டிருந்த அந்தப் பூஜை அறையின் வராந்தாப் பக்கச் சுவர் முழுதும் அழகான டிசைனின் இரும்புக் கம்பி போடப்பட்டிருந்தது. கம்பிக்கு வெளியில் வெளிச்சத்துக்காகச் சுவர் உயரத்துக்கே கண்ணாடி போடப்பட்டிருந்தது.

'குஹாலயம்' என்று சலவைக் கல்லில் பதிக்கப்பட்ட பெயரைத் தாங்கி நிற்கும் அந்தப் பங்களா பழனியப்பருக்குச் சொந்தம். அந்த ஊரில் பெரிய புள்ளி. திகர்ப் பணக்காரர் என்று எல்லோரும் மறைமுகமாகப் பேசிக் கொள்வார்கள்.

அந்த ஊரில் ஒரு புராதன சுப்பிரமணிய சுவாமி கோவில் இருந்தது. இடிந்து பாழாகிக் கிடந்த அந்தக் கோயிலுக்குப் பழனியப்பரால் விமோசனம் வந்தது என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். ஆனால் அந்தக் கோவிலால்தான் பழனியப்பருக்கு விமோசனம் பிறந்தது என்ற உண்மை அனைவருக்கும் தெரிய நியாயமில்லை.

முன் காலத்தில் ஏதோ ஒரு ராஜாவினால் அந்தக் கோவிலுக்கு மானியமாக அளிக்கப்பட்ட நிலங்களும் நகைகளும் இருந்தன. இதை எப்படியோ அறிந்த பழனியப்பர், கோவிலைப் புனருத்தாரணம் செய்வதாக முன் வந்து சாமர்த்தியமாகத் தம்மை உத்தாரணம் செய்து கொண்டார்.

அதே சமயம் எல்லார் கவனத்தையும் திருப்புவதற்காகக் கோவிலையும் செப்பனிட்டார். விஷமறியாத ஜனங்கள் ஏதோ அவர் தம் சொந்தச் செலவில் இவ்வளவும் செய்வதாக எண்ணி வியந்தார்கள்.

இதெல்லாம் பழனியப்பரின் தோட்டக்காரனுக்கும் அவன் ஒரே மகன் வடிவேலுவுக்கும் இந்த ஜன்மத்தில் தெரியப் போவதில்லை. தெரிந்தாலும் புரியப் போவதில்லை!

வடிவேலுவுக்குப் பத்து வயதுதான் இருக்கும். அந்தப் பிஞ்சு மனத்தில் பழநியப்பரின் பூஜை அறைக் காட்சி அப்படியே பதிந்து விட்டது. தன் வயதொத்த பிள்ளைகளுடன் விளையாடுவதையும் மறந்து அடிக்கடி, தன் மனக் கண்ணில் முருகனை நினைந்து ஆனந்தப்பட ஆரம்பித்தான்.

சில நாட்களில் அவனுக்குத் தானும் ஒரு தனி பூஜை அறை முருகனுக்குக் கட்டவேண்டும் என்ற தகாத ஆசை உண்டாயிற்று. ஆசைதானே துக்கத்துக்குக் காரணம் என்று அவனுக்குத் தெரிய நியாயமில்லை. ஆனாலும் அதே ஞாபகத்தில் இருந்த வடிவேலுவின் வாழ்வில் அன்று எதிர்பாராத நிகழ்ச்சி ஒன்று நடந்தது.



தோட்டத்தில் விழுந்த குப்பைகளைப் பெருக்கிக் குவித்த கந்தப்பனுக்கு உதவியாக வடிவேலு அதை வாரி வீதியில் கொட்டுவான்.

அன்றும் அப்படியே குவிந்த குப்பையை வாரிக் கூடையில் போட்டபோதுதான் வடிவேலுவுக்கு அந்தப் படம் கிடைத்தது.

பழனியப்பருக்குப் புது வருட வாழ்த்து அனுப்பிய அன்பர் ஒருவர் அவருடைய முருக பக்தியை நினைவில் கொண்டு அதை ஓர் அழகான, பெரிய முருகன் படம் போட்ட வாழ்த்தாக அனுப்பி யிருந்தார். வருடம் பிறந்து நாலைந்து நாட்களுக்குப் பிறகு எல்லா வாழ்த்துக் கடிதங்களுக்கும் ஏற்பட்ட கதி அந்த முருகன் பட வாழ்த்துக்கும் ஏற்படவே, அது குப்பைக் கூடைக்கு வந்து விட்டது.

வடிவேலுவுக்கு அதைப் பார்த்ததும் மகிழ்ச்சி பிடிபடவில்லை. ஒரே ஓட்டமாகப் பங்களா காம்பவுண்டை ஒட்டித் தோட்டத்தின் கோடியில் இருந்த தன் குடிசையை நோக்கி ஓடினான்.

சிறிது கசங்கி யிருந்த படத்தை நீவி நீவிச் சரிப்படுத்தி, அதை அழகாக ஓர் அட்டையில் ஒட்டியபோது கோலக் குமரன், வடிவேலுவைப் பார்த்துக் குமின் சிரிப்புச் சிரித்தான். வடிவேலுவுக்கு மெய் சிலிர்த்தது.

''முருகா...முருகா!...'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டு சுவரில் படத்தைச் சாத்தி வைத்துவிட்டுக் கீழே விழுந்து கும்பிட்டான் வடிவேலு.

அன்றிலிருந்து வடிவேலுவுக்குத் தன் முருகன் பிரச்னையே பெரிய பிரச்னையாகி விட்டது. அந்தப் படத்தை எங்கே வைப்பது என்று தெரியாமல் திண்டாடினான். வஸ்

ணைந்து மேட்டை ஒட்டினாற்போல் பெரிய வேப்ப மரம் கப்பும் கிளையுமாகப் படர்ந்திருந்தது.

மண் மேட்டைச் சீர் செய்து படத்தை வேப்ப மரத்தின் அடியில் சாய்த்து நிறுத்தினான். அவனுக்கு மனம் நிறைந்துவிட்டது.




# வேலும் விளையாட்டும்

எஸ்.பத்மாவதி

நல்ல நிழல். சுகமான காற்று! இருந்தாலும் படத்துக்குப் பாதுகாப்பு இல்லையே! அங்கும் இங்கும் அலைந்து இரண்டு ஓலைத் துணுக்குகளைக் கொண்டு வந்து, மேலே கோபுர வடிவத்தில் சாய்த்துக் கூரையாக நிறுத்தினான்.

குனிந்து பார்த்தபோது குமரன் தன் குட்டி பக்தனைப் பார்த்துத் திருப்தியாகச் சிரித்தான். வடிவேலுவுக்கு உற்சாகம்தாங்கவில்லை.

''டேய், டேய்! வாங்கடா...'' என்று தன் நண்பர்களுக்குக் குரல் கொடுத்துக் கொண்டே தன் குடிசையைத் தொட்டாற் போல் இருந்த வேலிப் படலைத் தாண்டிக் குதித்து ஓடினான்.

பத்து நிமிடங்களில் அந்த வேப்பமர நிழலில் கூடிய கூட்டத்தைப் பார்த்துவிட்டுக் குமரனே அசந்துவிட்டான்!

ஒன்றரை வயதுக் குழந்தையிலிருந்து பத்து பன்னிரண்டு வயதுக்குழந்தைகள் வரையில் இருபது, இருபத்தைந்து குடிசைவாழ் பிரஜைகள் அங்கு கூடி, வடிவேலுவின் முருகன் கோவிலைச் சுற்றி நின்று ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

அன்றிலிருந்து வடிவேலுவுக்கு ஓயாத வேலை! நிமிடத்துக்கு நிமிடம் அவனுடைய முருகன் கோயில் அபிவிருத்தி அடைந்து கொண் டிருந்தது.

அந்த ஊர்க் கோயிலில் பஜனை செய்யப் படுவதைப் பார்த்திருந்த வடிவேலுவுக்கு முருகனைச் சும்மா உட்கார்த்துவது பாவம் என்று தோன்றியது. மாலையில் பள்ளியிலிருந்து திரும்பிய பிறகு, கிணற்றடியில் குளித்து, விபூதி பூசி, குரல் கொடுத்தவுடன் அவன் கோயிலுக்குப் பக்தகோடிகள் வந்து விடுவார்கள்.

பிறகு அவன் ஒரு தகர டப்பாவை வைத்துக் கொண்டு தட்டியபடியே, ''வேல்.. வேல், முருகா!'' என்று கூவுவான். உடனே கூட்டம், '''வெற்றிவேல் முருகா !'' என்று எதிர்க் குரல் கொடுக்கும். ''வேல்....வேல்... முருகா...! 'வெற்றி வேல் முருகா...!'' என்ற கூச்சல் அதிகரிக்க அதிகரிக்க, கூட்டத்தினருக்கு உற்சாகம் பிறக்கும். கீச்சுக் குரலில் உச்ச ஸ்தாயியில் கத்துவார்கள். இந்தப் பஜனை... சுமார் அரை மணி நேரம் நடக்கும்.

பிறகு எல்லோரும் விழுந்து கும்பிட வேண்டும். வடிவேலு, சூடம் கொளுத்திக் குனிந்து முருகனுக்குக் காட்டுவான்.

அடடா ! அந்த வேலனுக்குத்தான் என்ன சிரிப்பு ! குறும்புப் புன்னகை தவழ.... தன் தோழர்களைப் பார்ப்பான்.

அந்த ஊரில் கந்த சஷ்டி விழா ஒரு மாதம் அமர்க்களமாக நடக்கும். பல ஊர்களிலிருந்தும், மக்கள் கூட்டம் கூட்டமாக வருவார்கள். இந்த வருடம் கந்த சஷ்டி விழாவின் போது முருகனுக்குப் புதிதாக 'வைர வேல்' சாத்தப்படும் என்ற செய்தி வேறு எங்கும் பரவியிருந்தது.

கோயிலின் புராதன நகைகளில் இரண்டு பெரிய வைரப் பதக்கங்கள் இருந்தன. அதைப் பிரித்து வைரங்களுக்குப் பட்டை தீட்டி, முருகனுக்கு வைர வேலாகச் செய்து சாத்த வேண்டும் என்று பழனியப்பர் தலைமையில் தீர்மானமாயிற்று.

ஊர்ப் பெரிய மனிதர்களின் முன்னிலையில், தினமும் அதற்கான வேலை, கோயிலின் ஒதுக்குப் புறத்தில், பாதுகாப்பான இடத்தில், கண்காணிப்புடன் நடந்து வந்தது.

பழனியப்பர் தினமும் அங்கு சென்று மேற்பார்வை பார்த்து வந்தார். பழங்காலத்து விலை மதிப்பிட முடியாத வைரங்கள் அவை. பட்டை தீட்டப்பட்ட போது, பல வர்ணங்களை வாரி இறைத்துக்கொண்டு ஜொலித்தன.

முக்கியமாக, பதக்கங்களின் நடுவிலிருந்த இரு பெரிய வைரங்கள் விலை மதிக்க முடியாதவை! ஒரு பெரிய பாதாம் பருப்பு அளவிலிருந்த அந்த வைரக் கற்களை, வேலின் நடுமத்தியில் இருபுறமும் பதிப்பதாக ஏற்பாடு.

இதைத் தவிர வைர வேல் காணிக்கை. உண்டியில் வேறு தேவைக்கும் அதிகமாகப் பணம் சேர்ந்திருந்தது. அதிலிருந்து, மேற்கொண்டு தேவைப்பட்ட வைரக் கற்களை வாங்கி வர, பழனியப்பரும், பிரதான பொற்கொல்லர் கிருஷ்ணாச்சாரியும் அடிக்கடி பட்டணத்துக்குப் போய் வந்தனர்.

வைரவேல் வேலை இராப் பகலாக நடந்து வந்தது. கந்த சஷ்டியன்று, முத்துப் பல்லக்கு சிங்காரித்து, அதில் வைர வேலை வைத்து ஊர்வலமாக வந்து, கோயிலில் விசேஷ பூஜைகளுடன் சுவாமிக்குச் சாத்துவதற்கான ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருந்தன.

கந்த சஷ்டிக்கு ஒரு வாரம் முன்பே வைர வேல் வேலை பூர்த்தியாகி விட்டது. அதன் அழகும், ஜொலிப்பும், கம்பீரமும், பார்ப்பவர்களைப் பரவசமூட்டி, பக்திப் பெருக்கில் மூழ்க வைத்தது. அன்று மாலை வைரவேல் பத்திரமாகப் பெட்டியில் வைக்கப்பட்டுப் பழனியப்பர் வீட்டு மூன்றாவது மாடியில் உள்ள இரும்புப் பெட்டி அறைக்குக் கொண்டு போகப்பட்டுப் பூட்டப்பட்டு விட்டது.

மாலை வடிவேலுவின் முருகனுக்கு வழக்கமான பஜனை நடந்தது. பக்தகோடிகள் கலைந்து போன பிறகும், வடிவேலு மட்டும், தன் கோயிலின் முன்னால் மௌனமாக அமர்ந்திருந்தான். அவன் கண்கள் முருகனையே பார்த்துக் கொண்டிருந்தன. அவன் மனத்தில் பலப் பல எண்ணங்கள். வாய் மட்டும், ''வைர வேல், வைரவேல்'' என்று முணுமுணுப்பதை நிறுத்தவில்லை.

மறு நாள் காலை வடிவேலுவின் குடிசைக்கு வெளியே, வைரவேல் வேலை துவங்கி விட்டது.

வேப்ப மரக் குச்சி ஒன்றை பட்டை நீக்கி, வழுவழுப்பாகச் சீவினான் வடிவேலு. பழனியப்பரின் படுக்கையறை ஜன்னலுக்கு வெளியே எப்பொழுதும், காலி சிகரெட் பெட்டிகள் கிடப்பது வழக்கம். காலைச் சாப்பாட்டுக்குப் பிறகும், இரவு படுப்பதற்கு முன்பும், பழனியப்பரால் சிகரெட் புகைக்காமல் இருக்க முடியாது.

வைரவேல் வேலை ஆரம்பித்த பிறகு, அவர் ஆழ்ந்து யோசிக்க வேண்டிய விஷயங்கள் நிறைய இருந்ததால், படுக்கை அறையின் வெளியே, காலி சிகரெட் பெட்டிகளின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே வந்தது.

வடிவேலு, ஓடிச் சென்று காலி சிகரெட் பெட்டிகளை வாரிக் கொண்டு வந்தான். அதனுள்ளிருந்த பளபளப்பான சில்வர் காகிதங்களை எடுத்து, நீவி நிமிர்த்திக்கொண்

# பயர்ஸ்டோன் படைத்திடும் மிக வலிமையான டயருக்கு ஈடுநிற்குமா உங்கள் கார் டயர்கள்?

ஓட்டுவதற்கென மிகக் கண்டிப்பான தேவைகளைக் கருத்திற்கொண்டு உருவாக்கப்பட்ட டயர் இது. கரடுமுரடான சாலைகளிலும் சுகமாக ஓடக்கூடிய டயர். கோடை வெப்பத்திற்கு ஈடுகொடுக்கக் கூடிய டயர். மழைபெய்த ஈரச் சாலைகளிலும் பாதுகாப்புத் தரும் டயர். அடிக்கடி நிறுத்தி நிறுத்தி ஓட்டும் கடுவினைகளுக்கு நன்கு தாக்குப் பிடிக்கும்.

இத்தகைய உறுதியை நீங்கள் ஒரு பயர்ஸ்டோன் டயரிலே பெறக் காரணம்: அதற்கென்றே உசிதமாக அமைந்த மும்மடங்கு வலிமையுள்ள கட்டுமானம்—டயருடன் டிரெட்டை ஒட்டிப் பிணைக்கவும், பக்கவாடுகளைப் பலப்படுத்தவும், கார்டுகளை இன்சுலேட் செய்வதற்குமான தனிப்பட்ட முறை இது.

கொடுக்கும் பணத்திற்குக் கூடுதலான கிலோமீட்டர்களும், அதிகப் பாதுகாப்பும் வேண்டுமானால் உங்களுக்குத் தேவை பயர்ஸ்டோன் படைத்திடும் **வலிமையான டயர் தான்.**

**40 ஆண்டுகளுக்கு மேலாக நம் நாட்டுக்குப் பணிபுரிவது.**

FOCUS W-3401 TM

**பயர்ஸ்டோன்**




இந்தியாவெங்கும் வாங்கக் கிடைக்கிறது—இன்றே காண்க உங்கள் பயர்ஸ்டோன் விற்பனையாளரை.

டான். இனி மேல் அவனுக்குக் கவலை இல்லை. பழைய நோட்டுப் புத்தகத்தின் கனமான அட்டையைக் கிழித்து, ஆலிலை வடிவத்தில் இரண்டு துண்டுகள் வெட்டிக் கொண்டான்.

ஆயாளை நச்சி, மைதாமாவு பசை கொஞ்சம் வாங்கிக் கொண்டு குடிசைக்கு வெளியே உட்கார்ந்து விட்டான். நன்றாகச் சீவப்பட்ட வேப்பங்குச்சியின் மெலிந்த ஒரு முனையில், ஆலிலை வடிவத்தில் கத்திரித்த அட்டைகளை, பக்கத்துக்கு ஒன்றாக வைத்து ஒட்டியபோது, குச்சியின் முனை நடுவில் மறைந்து, வேல் போன்ற வடிவம் ஏற்பட்டது.

ஆயிற்று ! இனிமேல் வைர வேலைப்பாடு தான் ! பளபளப்பான சிகரெட் காகிதத்தை அளவாகக் கத்திரித்து, வேலின் இருபுறமும் ஒட்டினான். கைப் பிடித் தண்டுக்கும், பளபளப்பான சிகரெட் காகிதத்தைச் சுற்றிச் சுற்றி ஒட்டியாகி விட்டது.

பசை காய்வதற்காக அதை மரத்தடியில் சாய்த்து நிறுத்திய வடிவேலு, கை கழுவுவதற்காகக் கிணற்றடிக்குப் போய்த் திரும்பிய போது அப்படியே திகைத்து விட்டான் !

மரக் கிளை அசைந்து, வெயில் வேல் மேல் விழ, அதிலிருந்து பிரதிபலித்த பிரகாசம், அவன் கண்களைக் கூச வைத்தது.

வடிவேலு தன் முருகனுக்கு வேல் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்த போது, பழனியப்பரும் இரகசியமான ஒரு வேலையில் ஈடுபட்டிருந்தார். அந்தச் செய்கை பரம இரகசியமாக இருப்பதற்காகத் தம் மனைவி குழந்தைகளைக் கூட, பக்கத்துக் கிராமத்திலிருந்த தம் தமக்கை வீட்டுக்கு அனுப்பி விட்டார்.

அவருடைய மாளிகையின் மூன்றாவது மாடியில் கட்டப்பட்டிருந்த, அறை மிகவும் பத்திரமானது. சுவர்களெல்லாம் நடுவில் இரும்புக் கம்பி கொடுத்துக் கட்டப்பட்டவை.

அந்த அறையில்தான் அவருடைய சொத்துக்களையும், நகைகளையும் அடக்கிக் கொண்டிருந்த பெரிய இரும்புப் பெட்டி வைக்கப் பட்டிருந்தது.

அந்தப் பெட்டிக்குள் கோயில் சொத்தான 'வைர வேல்' மிகமிகப் பத்திரமாக இருக்கிறது என்று ஊர் ஜனங்களும், கோயில் நிர்வாகஸ்தர்களும் எண்ணிக் கொண்டிருந்த வேளையில் அதற்குப் புறம்பான காரியம் அங்கு நடந்து கொண்டிருந்தது.

வைர வேல் செய்ய வேண்டும் என்று முதலில் யோசனை கூறியவர் பழனியப்பர் தான். கோயிலில் இருந்த, இரு வைரப் பதக்கங்களும் பிரிக்கப்பட்டு, வேல் தயாரான போதே, அவர் மனத்தில் ஒரு திட்டமும் தயாராகிவிட்டது.

அவர் திட்டத்துக்குப் பக்கபலமாக நின்ற பிரதான பொற்கொல்லர் கிருஷ்ணாச்சாரியும், முன்னமேயே பழனியப்பருக்குப் பலவிதத்திலும் துணை நின்று, சுகம் கண்டவர்.

ஆனால் இந்தத் தடவை அவர்கள் இருவரும் செய்யத் துணிந்த காரியம் பெரியது. பதக்கத்தின் நடுவிலுள்ள பெரிய வைரங்களை மாற்றி, வேறு போலி வைரங்கள் வைக்க எண்ணியது, அவர்கள் இருவருக்கு மட்டுமே தெரிந்த ரகசியம்.

பல தடவைகள், பட்டணத்துக்குச் சேர்ந்து சென்று வந்த பழனியப்பரும், கிருஷ்ணாச்சாரி



''முதலாளியின் போக்கைக் கண்டித்து எங்க தொழிற்சாலையின் காம்பவுண்ட் வாசலில் ஊழியர்கள் அனைவரும் உண்ணாவிரதம் இருக்கப் போகிறோம்.''

''எத்தனை நாள்?''

''கோரிக்கை ஈடேறும் வரை, விடாமல் தினசரி பத்து நிமிஷந் தொடர் உண்ணாவிரதம்!''

யும், உண்மையான வைரத்தின் பரிமாணத்துக்கே, சிறிதும் மாறுதலின்றி, போலி வைரம் தயாரித்து விட்டனர். நான்கு வைரங்களையும் கலந்து விட்டால், எது உண்மை.... எது போலி... என்று கண்டுபிடிப்பது கடினம்.

கோயிலில் பலர் முன்னிலையில், சாமர்த்தியமாக, வேலின் இருபுறமும், கிருஷ்ணாச்சாரியால் பொருத்தப்பட்ட, அந்தப் பெரிய வைரக் கற்கள் பழனியப்பர் வீட்டுக்குக் கொண்டுவந்தபிறகு,மாற்றப்படுவதாசிரமம்?

அன்று இரவு ஊரே உறங்கிக் கிடந்த பொழுது, அந்தப் பொற்கொல்லர், பழனியப்பர் வீட்டு மூன்றாவது மாடியில் உள்ள அறையின் கனத்த கதவுகளுக்குப் பின்னால் உட்கார்ந்திருந்தார்.

அவர் கையில் கொடுக்கப்பட்ட வேலிலிருந்து, உண்மையான வைரக் கற்களை, அவர் நலுங்காமல் வெளியே எடுத்த போது, பழனியப்பருக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவருடைய நெடு நாள் இலக்கு தவறவில்லை !

அடங்காத ஆர்வத்துடன் பழனியப்பர் அந்த விலை மதிக்கவொண்ணாத வைரக் கற்களைக் கையில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்த போது, பொற்கொல்லர் அதே போன்ற போலி வைரங்களைப் பெட்டியிலிருந்து எடுத்துக் காலியான இடத்தில் பொருத்தும் முயற்சியில் ஈடுபட்டார்.

அந்தச் சமயம் பார்த்துத்தானா வீதியில் கார் ஓசை கேட்க வேண்டும்! கார் ஹாரன் இடைவிடாமல் அடிக்கப்படவே, வீதிப் பக்கம் பார்த்தபடி இருந்த, அந்த அறை ஜன்னலை, ஓசைப்படாமல் திறந்து, எட்டிப் பார்த்த பழனியப்பருக்கு இருதயமே நின்றுவிடும் போல இருந்தது.

பூட்டிய கேட்டுகளுக்கு முன்னால், வெளிச்சத்தைப் பாய்ச்சியபடி, ஒரு போலீஸ் ஜீப் நிறுத்தப்பட்டிருந்தது. அதிலிருந்து இறங்கி, கேட்டினருகே நின்றிருந்த போலீஸ் இன்ஸ்பெக்டர் வேறு யாருமில்லை ! அவர் தம்பி மகன் சந்திரன்தான் !

''சந்திரன் என்ற பெயருக்குப் பதில் 'அரிச்சந்திரன்' என்று வைத்திருக்கலாமே'' என்று

பழனியப்பர் ஆத்திரத்துடன் பல தடவை எண்ணியதுண்டு. அதற்குக் காரணம் மது விலக்கை மீறிய குற்றத்துக்காக, சொந்தத் தகப்பனையே அவன் கோர்ட்டில் கொண்டு வந்து நிறுத்தியதுதான்.

அப்படிப்பட்டவன் இந்த இக்கட்டான நேரத்தில் இங்கு வந்து சேர்ந்து விட்டானே !

''ஆண்டவா!'' தலையில் கை வைத்துப் பழனியப்பர் திகைத்து நின்ற போது, கார்க் காரனின் இடைவிடாத அலறலினால் எழுப்பப் பட்ட தோட்டக்கார கந்தப்பன், கேட்டைத் திறக்க, சாவிக் கொத்துடன் ஓடுவதையும், காரின் முன் விளக்கு வெளிச்சத்தில் பழனி யப்பரால் பார்க்க முடிந்தது.

திகைத்து நின்ற பழனியப்பர், மின்னல் வேகத்தில் ஜன்னலைச் சாத்திவிட்டு, ''இருஷ் ணுச்சாரி ! அப்படியே எல்லாத்தையும் வைச் சுட்டு எழுந்திருமய்யா! போலீஸ் வந்திருக்கு'' என்று பதறியபடியே அங்கும் இங்கும் அறையி னுள் ஓடினார்.

ஒரு நிமிடம் வேலை செய்ய மறுத்த அவர் மூளை, மறுநிமிடம் அசுர வேகத்தில் செயல் பட்டது.

தரதர என்று இருஷ்ணுச்சாரியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு அறையை விட்டு வெளியேறி, கதவை இழுத்துப் பூட்டிய வேகத்திலேயே பொற்கொல்லரை மறு கோடியிலிருந்த மற்றோர் அறையில் தள்ளிக் கதவைச் சாத்தினார்.

அடுத்த நிமிடம் அவர் கால்கள் இரண் டாவது மாடியில் உள்ள அவர் படுக்கை அறைக்கு விரைந்தன.

அவர் படுக்கையில் போய் அமர்ந்தபோது, கீழே சமையல்காரர், வீட்டின் கதவைத் திறக்கும் சத்தமும், அதைத் தொடர்ந்து டக்.... டக்... என்று பூட்ஸ் ஒலி மாடிப்படி களில் எதிரொலிப்பதும் கேட்டன. சந்திர னின் ஒவ்வொரு காலடி ஓசையும், அவர் இருதயத்திலேயே எதிரொலிப்பது போல இருந்தது.

படபடத்த இருதயத்தை அழுத்திக் கொண்டு, அப்பொழுதுதான் தூக்கத்தி லிருந்து எழுந்திருப்பவர் போல் பாவனை செய்தபடி, அறை விளக்கைப் போட்டவர், அறைக்கு வெளியே வந்து நின்ற தம்பி மகனைப் பார்த்து அசட்டுச் சிரிப்புச் சிரித் தார்.

'' என்ன, பெரியப்பா ! இன்னும் தூங்க லையா? மன்னிக்கணும்...! நான் உங்க தூக்கத் தைப் பாதியில் கலைச்சுட்டேன் போலிருக்கு'' என்ற சந்திரன் சட்டென்று அவரைக் கூர்ந்து பார்த்து. ''ஏன், பெரியப்பா ! உங்க ளுக்கு இப்படி மூச்சு இரைக்கிறது?'' என்று கேட்டான்.

பழனியப்பர் தம் கலக்கத்தை மறைத்த படி, ''பின்னே என்ன ! உன்னைப் போல் நான் சின்னப் பிள்ளையா ? படுக்கையை விட்டு எழுந்தாலே மூச்சு வாங்குது. வயசாகு தில்லே...?'' என்று கூறியபடியே ''சரி சரி, சாப்பிட்டு கிப்பாடு ஆச்சா இல்லையா?'' என்று பேச்சை மாற்றினார்.

சந்திரன் சிரித்தபடியே ''இந்த அகாலத் தில் சாப்பாடா? எல்லாம் அப்பவே ஆச்சு...! மூணு நாளுக்குப் பக்கத்து ஊருலே ஸ்பெஷல் டியூடி..... ! அது முடிஞ்சதும், கந்த சஷ்டி விழா சமயத்திலே... இந்த ஊருலே டியூடி! காலையிலே எழுந்து போயிடுவேன் ! ''சரி சரி... நீங்க படுங்க... நான் என் அறைக் குப் போய் ஓய்வெடுத்துக்கறேன்...'' என்று கூறிவிட்டு இடுப்பு பெல்டைக் கழற்றியவாறே ஹாலின் மறுகோடியில் அவன் தங்கும் அறையை நோக்கிச் சென்றான்.

இரவு முழுதும் பழனியப்பரின் கண்கள் மூடவேயில்லை. காலையில் தம்மையும் மறந்து சிறிது கண்ணயர்ந்தவர் விழித்துப் பார்த்த போது நன்றாக விடிந்திருந்தது.

சந்திரன் அதிகாலையிலேயே எழுந்து, பழனியப்பரை எழுப்ப வேண்டாம் என்று சமையற்காரரிடம் சொல்லிவிட்டுக் கிளம்பிச் சென்ற செய்தியைக் கேட்ட போதுதான் அவர் மனம் நிம்மதியடைந்தது.

விரைவாக காலைக் கடன்களை முடித்தவர், தயாராகக் காத்திருந்த இருஷ்ணுச்சாரி யுடன், பொக்கிஷ அறையில் நுழைந்து கத வைத் தாளிட்ட போது, வைரவேல் உட்பட எல்லாம் வைத்தது வைத்தபடியே இருப்ப தைப் பார்த்ததும்தான் அவர் நிம்மதியாக மூச்சு விட்டார்.

அடுத்த கணம் அவர் தலையில் பேரிடி விழ இருந்ததை அவர் உணரவில்லை !

போலி வைரக் கற்களை வெல்வெட் பெட்டியிலிருந்து கையில் எடுத்த பொற் கொல்லர், ''ஐயா ! இந்தப் பெட்டியி லேயே அந்த வைரங்களைப் பத்திரமாக வைத்து விடுங்கள்....'' என்று கூறிக் காலிப் பெட்டியை நீட்டிய போதுதான் பழநியப்ப ருக்கு, இருதயத்தில், சுரீரென்று வலிப்பது போல ஓர் அதிர்ச்சி ஏற்பட்டது.

'' நேற்று இரவு நடந்த கலாட்டாவில், நிஜ வைரக் கற்களை எங்கே வைத்தோம்....? அடடா, இவ்வளவு அஜாக்கிரதையாக.... அதைப் பற்றியே இதுவரை நினைவில்லாமல் இருந்துவிட்டேனே...'' என்று துடித்த பழனி யப்பர், பரபரப்பாக, அறையில் இங்கும் அங்கும் ஓடித் தேடிய போதுதான், இருஷ்ணுச் சாரிக்கு விஷயம் விளங்கிற்று.

இருவரும் அறையைச் சல்லடை போட்டுத் தேடினார்கள். முப்பது நிமிடங்களுக்குப் பிறகு, பிரமை பிடித்தவராகப் பழனியப்பர் தலையில் கைவைத்து உட்காரவே, இருஷ்ணுச் சாரி, மௌனமாக அவரைச் சந்தேகக் கண் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தார்.

'' வைரக் கற்களைத் தேடி எடுத்தபின் என்னைக் கூப்பிடுங்கள். பிறகு வந்து இந்தப் போலிக் கற்களை வேலில் பதிக்கிறேன்'' என்று தீர்மானமாகக் கூறிவிட்டுக் இருஷ்ணுச்சாரி துண்டை உதறிப் போட்டுக் கொண்டு வெளி யேறியபோது பழனியப்பரின் மூளையே கலங் கிப் போய் விட்டது.

இன்னும் நான்கே நாட்கள், கந்தசஷ்டிக்கு! வேல் பொக்கையாக இரும்புப் பெட்டியில் இருக்கிறது! நிஜ வைரங்கள் கிடைக்காவிட் டால், கந்த சஷ்டி அன்று முருகனுக்கு வைர வேல் கிடைக்குமோ கிடைக்காதோ! பழனி யப்பர் கைகளுக்கு இரும்புக் காப்பு நிச்சயம் !

இரண்டு நாட்களில் மனைவியும், குழந்தை களும், உறவினர்களும் வீடு திரும்பிவிடு

குளிர்காலத்திலும் சரி,
கோடைகாலத்திலும் சரி—
மார்கோசோப்
சுத்தம் செய்வதோடு மட்டும்
நிற்பதில்லை—
சருமத்தை பாதுகாக்கிறது.

**ஏனெனில் மார்கோவில்
மட்டுமே வேப்பெண்ணெய்
சேர்ந்துள்ளது.**




**மார்கோ சோப்**

ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

CCM-4183-A (Rev)

வார்கள். அதற்குள் ரகசியமாகச் செய்ய வேண்டிய வேலை முடியுமா ?

பிரமை பிடித்தவர் போல் உணவும், உறக்கமும் இல்லாமல் அவர் தவித்த போது, ஒரு நாள் ஓடிவிட்டது.

அறையிலேயே அடைபட்டுக் கிடந்த பழனியப்பர் வாய்விட்டு அழுதார். வாழ் நாளில் இதுவரை தாம் செய்த குற்றங்களை முதன் முறையாக நினைத்து நினைத்து அழு தார். அழ, அழ அவர் மன அழுக்கும் கரைந்து கொண்டே வந்தது.

ஆயிற்று இரண்டு நாட்கள் ஓடிவிட்டன. கோயிலில் விழா ஏற்பாடுகள் விமரிசையாக நடந்து கொண்டிருந்தன.

கிருஷ்ணச்சாரி வேறு இரண்டு தடவை தாமே வந்து முறைப்புடன், ''நாளைதானே உங்கள் தம்பி மகன் இன்ஸ்பெக்டர் சந்திரன் வருகிறார் ?'' என்று வேறு கிண்டலாகக் கூறிவிட்டுப் போய் விட்டார்.

பழனியப்பர் தலையைப் பிடித்துக்கொண்டு கட்டிலில் படுத்துக் கண்களை மூடிக் கொண் டார். தலையினுள் ஆயிரம் ஓசைகள்! அதை யும் மீறி, ''வேல்.... வேல் முருகா ! வெற்றி வேல்.... முருகா !'' என்ற கீச்சுக் குரல்கள் கேட்டன.

தள்ளாடி எழுந்த பழனியப்பர், கூடாவின் கோடியிலிருந்த ஜன்னலருகில் வந்து எட்டிப் பார்த்தார். தோட்டத்தின் மறுகோடியில் இருபது முப்பது குட்டிப் பசங்கள் கும்பலாக நிற்கிறார்கள். எல்லாரும் அரை நிஜார் அணிந்து பட்டை பட்டையாக விபூதி பூசிக் கொண்டிருக்கிறார்கள்.

அன்று வடிவேலுவின் கோயிலில் விசேஷ பூஜை ! அன்றுதான் அவன் தன் முருகனுக்கு வைரவேல் சாத்தப் போகிறான்!

ஒரு பெரிய பலகை நிறையப் பூவரசம் பூக்களும், அரளிப் பூக்களும் பரப்பி, அதன் மத்தியில் அவன் செய்த வைரவேல் வைக்கப் பட்டிருக்கிறது. மாலை வெய்யிலில் அது தக தகவென்று ஒளி வீசுகிறது !

அந்தப் பலகையை இரண்டு சிறுவர்கள் சுமந்து மெதுவாக ஊர்வலம் போல் முன்னே செல்லுகிறார்கள்! பின்னால் வடிவேலு குழு வினர், ''வேல்... வேல்... முருகா! வெற்றி வேல் முருகா !'' என்று கோஷமிட்டபடி செல்கிறார்கள்.

அவர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே ஊர்வலம், அந்தச் சிறிய கோயிலின் முன் வந்து நின்றது!

வடிவேலு முன்னால் வந்து சூடம் கொளுத் திக் காட்டுகிறான். எல்லாச் சிறுவர்களும், ''வேல்....! வேல்... வெற்றிவேல்! வேல் வேல்...'' பயபக்தியுடன் வேலை எடுத்து, இரண்டு கைகளிலும் தூக்கித் தலைக்கு மேலே பிடிக்கிறான்.

பிரமையுடன் பார்த்துக் கொண்டிருந்த பழனியப்பரின் கண்களைப் பளீரென்ற வெளிச் சம் தாக்கவே.... சட்டென்று கண்ணிமைகள் தாமாக மூடித் திறந்தன.

வடிவேலுவின் கையிலிருந்த வேலில், வெயில் பட்டுப் பிரகாசமாகப் பிரதிபலித்த ஒளியே, அவர் கண்களைத் தாக்கியது. அதே ஒளி அவர் மூளையையும் மின்னல் போலத் தாக்கியது.

உடல் நடுங்க, ஜன்னல் கம்பிகளில் முகத் தைப் பதித்தவாறு பழனியப்பர், விழிப்புடன் தோட்டத்தை உற்றுப் பார்த்தார்.

வடிவேலு, கையிலிருந்த வேலைத் தலைக்கு மேலே உயர்த்தியபடியே கண்களை மூடித் தியானித்துவிட்டுக் குனிந்து வேலை முருக னுக்குச் சாத்துகிறான்.

படபடவென்று கைதட்டல்! தொடர்ந்து வேல்.... வேல்.... வைரவேல்...! வெற்றி வேல்...! என்ற குரல்கள் விண்ணை மட்டுமா தொடுகின்றன....? பழனியப்பரின் மனத்தை யும் தொட்டு விட்டனவே ! அந்தக் குரல்கள்!

மூச்சு இரைக்க வடிவேலுவின் முன் வந்து நின்ற பழனியப்பர், குனிந்து கோயிலுக்குள் பார்க்கிறார். ''வேல் எங்கே?'' என்று அவர் வாய் கேட்கிறது !

வடிவேலு பயத்துடன் வேலை எடுத்து அவர் முன் நீட்டியபடியே பேச நா எழாமல் நிற்கி றான். நடுங்கும் கரங்களால் பழநியப்பர் அந்த வேலைத் தொடுகிறார். மறுகணம், அவர் கைப் பட்டு, வேலில் ஒட்டியிருந்த சிகரெட் காகிதம் சலசலக்கிறது..... !

அவர் கை வழியாக மின்சாரம் பாய்ந்து மூளையைத் தாக்குகிறது. உடல் சிலிர்க்க, ''முருகா !'' என்று வாய்விட்டுக் கூவிய பழநியப்பர் நெடுஞ்சாணாக வடிவேலுவின் கோயிலின் முன் நிலத்தில் படுத்துத் தொழு கிறார். அவர் கண்ணீர் பட்டுக் கரைந்த மண், அவர் முகமெல்லாம் ஒட்டிக் கொள்கிறது.

மெதுவாக எழுந்த அவர், கையிலிருந்த வேலைப்பத்திரமாக முருகனுக்குச்சாத்துகிறார்.

கண்களில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்ட பழனியப்பர், திகைத்து நிற்கும் வடிவேலுவின் முதுகைப் பரிவுடன் தட்டிக் கொடுத்துவிட்டு, வேகமாகப் பங்களாவை நோக்கிப் போகிறார். வடிவேலுவுக்கு ஒன்றும் புரியவில்லை ! உடல் சிலிர்க்க அவர் போவ தையே பிரமிப்புடன் பார்த்துக் கொண் டிருக்கிறான்.

வடிவேலு செய்த வைரவேல் பழனியப்ப ருக்கு அவர் தொலைத்த வைரத்தைக் காட்டிக் கொடுத்து விட்டது !

மூன்றாம் மாடியில் இரும்புப் பெட்டி வைத்துள்ள அறையைத் திறந்து, அதனுள் ளிருந்து மட்டுமே வெளியே உள்ள சிறிய பால்கனிக்குப் போகும். மற்றொரு பூட்டிய கதவைத் திறந்த பழநியப்பர், பால்கனியில் குவிந்திருந்த குப்பையினூடே கிடந்த ஒரு சிகரெட் பெட்டியைத் தாவி எடுத்துத் திறந் தார். அதனுள்....நான்கு சிகரெட்டுகளுடன் காணாமற் போன உண்மை வைரங்கள் பளபளத்துச் சிரித்தன.

அன்று இரவு தம்பி மகன் இன்ஸ்பெக்டர் சந்திரன், வரவை ஜன்னல் வழியாகப் பார்த்த பதற்றத்தில், ஒரு கையில் வைத் திருந்த வைரங்களை மறு கையிலிருந்த சிகரெட் பெட்டியில் போட்டதும், பிறகு ஜன்னலைச் சாத்தும் போது, மனம் குழம்ப, காலிப் பெட்டி என்று எண்ணி அதைப் பால்கனியில் வீசியதும், இன்று வடிவேலு வின் 'வைர வேலி'ல் ஒட்டப்பட்ட சிகரெட் காகிதத்தை ஸ்பரிசிக்கும் வரையில் பழனி யப்பருக்குத் துளியும் ஞாபகம் வராதது முருகனின் விளையாட்டுத்தானே !




சமீபத்தில் ஒரு நாள் 'இஞ்சிமுரப்பா' வாங்கினேன். அது ஒரு காகிதத்தால் சுற்றப்பட்டு நன்கு 'பாக்' செய்யப்பட்டிருந்தது. வீட்டுக்கு வந்து, மேலுறையை நீக்கி அதன் மேலிருந்த காகிதத்தை எடுத்தபோது அது முத்திரை இடப்பட்ட வாக்குச்சீட்டு என்றும், அது மணப்பாறை வாக்காளர்களுக்கு உரியதென்றும், அதன் பின்புறத்தில் எண் 91164 என்றும் போடப்பட்டிருந்தது. இதுதான் நேர்மையான வாக்கெடுப்பா?

திருச்சி-2 — கணபதி பாலவேங்கட
20-4-71 — சுப்பிரமணியன்.

பொதுத் தேர்தல் முடிந்து புதிய மந்திரிசபை அமைக்கப்பட்டு சுமார் ஒரு மாத காலம் ஆகிறது. ஆனால் இச்சிறிய காலத்துக்குள் தமிழ்நாட்டில் தி. மு. க. மந்திரிசபை அரசாங்க நிர்வாகத்தில் பல மாறுதல்களைச் செய்துள்ளது. சர்க்காரில் முதுகெலும்பாகக் கருதப்படும் பெரிய சிவில் அதிகாரிகள்கூட தி. மு. க. வின் பிடிக்குத் தப்பவில்லை. உதாரணமாகத் தமிழ்நாடு பிரதம காரியதரிசியாக இருந்த திரு இ. பி. ராயப்பா, ஐ. ஏ. எஸ். அவர்கள் அப்பதவியினின்றும் விடுவிக்கப் பட்டுள்ளார். இதில் குறிப்பிடத்தக்க விசேஷம் என்னவென்றால் இவரைப் பிரதம காரியதரிசி பதவிக்கு நியமனம் செய்வதிலும் கடும் எதிர்ப்பு தோன்றியது. பல உயர் அதிகாரிகளை முந்திக்கொண்டு இவரை இப்பதவியில் அமர்த்தினார்கள். அவரது நியமனம் பற்றிய சர்ச்சை சட்ட மன்றத்தில்கூட ஏற்பட்டது. மேலும் இவர் இந்தப் பதவிக்கு வந்து சொற்ப காலமே ஆகிறது.

இப்போது இவர் பிரதம காரியதரிசி பதவியினின்றும் விடுவிக்கப்பட்டுள்ளார். இதற்குக் காரணம் அரசியல் என்றே பொதுவாகப் பேசப்படுகிறது. இவர் மட்டுமல்லாது பல ஐ. ஏ. எஸ். அதிகாரிகளும் பழி வாங்கப் பட்டுள்ளார்கள். முதலமைச்சர் அவர்கள், கலெக்டர் மாநாட்டில் பேசும்போது சிவில் அதிகாரிகள் யாருக்கும் பயப்படாது நிர்வாகம் செய்ய வேண்டும் என்று கூறியுள்ளார். ஆனால் அவரே அரசியல் காரணத்துக்காகப் பழி வாங்குகிறார். இது தொட்டிலையும் ஆட்டி, பிள்ளையையும் கிள்ளிவிடுவது என்ற கதைதான்.

★ இக்குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது

இம்மாதிரி உயர் அதிகாரிகள் முறையில்லாமல் பழிவாங்கப்படுவது ஜனநாயகம் தழைத்தோங்க உதவாது. நிர்வாகச் சீரழிவு ஏற்படவே ஏதுவாகும்.

சோழவந்தான்
20-4-71 — கே. சக்திவேல்

"பிராமணர்களே! இதை உங்களுக்காகச் சொல்கிறேன். திருவாரூர் சென்று 1971ம் ஆண்டு மார்ச் மாதம் 1ந் தேதி செய்துவிட்ட பாவச் செயலுக்காக அந்தப் பாவம் நீங்க அங்குள்ள 'கமலாலயம்' என்ற திருக்குளத்தில் நீராடிவிட்டு நீங்கள் வேண்டும் கடவுளிடமே சென்று பாவ மன்னிப்புப் பெறுங்கள்."

இவ்வாறு தீர்த்த யாத்திரை செய்யச் சொன்ன ஆத்திகர் வேறு யாருமில்லை. பொறுப்பு மிக்க பதவியில் உள்ள நமது தமிழக முதல்வரே. (தினத்தந்தி 16-4-71)

தேர்தலுக்கு முன்பும் பின்பும் சாதிப் பிரச்னை பற்றி இடையறாது பேசி, மறைந்து வரும் அதனை நினைவூட்டி வருகின்றனர் தி.மு. கழகத் தலைவர்கள்.

ஜனநாயகத்தில் யாருக்கு வேண்டுமானாலும் வாக்களிக்கும் உரிமை பிரஜைக்கு உண்டு. தமக்குத்தான் வாக்களித்திருக்க வேண்டும்; அப்படி வாக்களிக்காதது பாவம் என்பது ஜனநாயகம் ஆகாது.

சென்னை-30
19-4-71 — எஸ். விசாலாக்ஷி.

★ நம் தேசத்தில் உள்ள மிகப் பெரிய பாங்குகள் தேசியமாக்கப்பட்டன. இருந்தும் இப்பாங்குகள் தனித் தனியாக இயங்கிவருகின்றன. இவைகளுக்குள் தொடர்ந்து போட்டியும் இருந்து வருகிறது. இவை ஒவ்வொரு சிறிய ஊரிலும்கூடத் தங்கள் தங்கள் கிளைகளைத் திறந்து வருகின்றன.

எல்லாக் கிளைகளிலும் வியாபாரம் இல்லை. அலுவல்கள் மிகக் குறைவு. சிப்பந்திகளுக்கும் போதிய வேலையின்மையால் வாளாவிருக்க நேரிடுகிறது. இதனால் பாங்குகள் நஷ்டத்துக்கு உள்ளாகின்றன. இதைப் பற்றிக் கவலைப்படுபவர் கிடையாது. "எல்லாம் தேசியமயமாக்கப்பட்டு விட்டதால், நஷ்டம் ஒரு சாராருக்கும் கிடையாது. அரசாங்கத்துக்குத்தான்" என்று சும்மா இருந்துவிடுகிறார்கள். இதுதான் மக்களின் நன்மைக்காகத் தேசிய மாக்கப்பட்டதன் விளைவு.

தில்லியில் உள்ள பாங்க் ஊழியர்களில் சிலர் நம் மத்திய நிதி அமைச்சரான ஸ்ரீ சவாணிடம் இதுபற்றித் தங்கள் வருத்தத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

இதனை அரசு கவனத்தில் கொண்டு அதற்கேற்பச் செயல் புரியுமா?

டால்மியாபுரம்
29-4-71 — சி.ஆர். திருவேங்கடத்தான்

கோவையில் சில்லறை கிடைப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது. ரூபாய்க்கு 90 பைசாதான் கிடைக்கிறது. இந்த நிலை மற்ற இடங்களிலும் தொத்திப் பரவுகிறது.

இந்தத் திடீர் சில்லறைக் கிராக்கி ஏன்?

கோவை
17-4-71 — பி. நாகேசுவரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

# BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

# GRASIM STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- *Attractive Fancy Dress material for ladies*
- *Immaculate Bush Shirtings for gents*
- *Decorative Tapestry and Curtain materials*
- *Priced cheaper than cotton fabrics*



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA (M.P.)**

[illegible] No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon